# அகத்தியர் குழம்பு

## மூலமும் உரையும்




தொகுப்பாசிரியர்:
டாக்டர் செ. பிரேமா, எம்.டி. (சித்தா),
இணைப்பேராசிரியர், சித்த மருத்துவத் துறை.

உரையாசிரியர்:
புலவர் ப. வெ. நாகராசன். பி. லிட்.,
சுவடிப் பொறுப்பாளர், ஓலைச்சுவடித் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்.



தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்.

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு: 60

திருவள்ளுவர் ஆண்டு 2017 - ஆனி: சூலை - 1986

ஆசிரியர்: சே. பிரேமா

ப. வெ. நாகராசன்

நூல் : அகத்தியர் குழம்பு

பதிப்பு : முதற்பதிப்பு

விலை : உரு. 40 — 00

அச்சு : அழகர் அச்சகம்,

அண்ணாமலை நகர்.

## பொருளடக்கம்

# முன்னுரை

அகத்தியர் குழம்பு சித்த மருத்துவத்தில் மிகப் புகழ்பெற்ற ஓர் அரிய மருந்தாகும். தக்க அநுபானங்களுடன் உரிய அளவில் கொடுக்கப்பட்டுவந்தால் இம்மருந்து பல்வேறு பிணிகளையும் நீக்க வல்லது.

அகத்தியர் குழம்பு என்ற பெயரில் சித்த மருத்துவ நூல்களில் பல குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றுள் உண்மையான அகத்தியர் குழம்பு எது என்பதில் பல வேறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. பிற்காலத்தில் வாழ்ந்த மருத்துவ நூலாசிரியர்களும் தங்களால் இயற்றப்பெற்ற நூல்களுக்கும், அகத்தியர் முதலிய பண்டையோர் பெயரையிட்டே வழங்கினர் என்பது யாவரும் அறிந்ததே. அகத்தியர் குழம்பைப் பற்றிக் கூறும் இச் செய்யுள்களின் நடையே இவை அகத்தியர் பெயரால் மிகப் பிற்காலத்தில் இயற்றப்பெற்றவை எனக் காண்பித்துவிடுகிறது.

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சுவடி நூலகத்தில் 'அகஸ்தியர் குழம்பு' என்ற தலைப்பில் பத்துப் பாடல்களைக் கொண்ட ஒரு சுவடி உள்ளது (எண். 401). தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் மூன்று சுவடிகள் உள்ளன. அவற்றுள் 159 ஏ (பி) என்னும் எண்ணுள்ள சுவடி 'அருவு குழம்பு' எனத் தலைப்பிடப்பட்டு 7 பாடல்களைப் பெற்றுள்ளது. சுவடி எண் 276 பி 9 பாடல்களையும், சுவடி எண் 899 இருபத்தைந்து பாடல்களையும் பெற்றுள்ளன. கோவை சின்னவேடன்பட்டியைச் சேர்ந்த உயர்திரு ஆர். கிருஷ்ணன் அவர்களிடமிருந்து பெற்ற சுவடியில் 54 பாடல்கள் உள்ளன. எனினும் முற்றுப்பெற்றதாகத் தோன்றவில்லை. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் 4 சுவடிகள் உள்ளன. (எண் ஆர். 3607, ஆர். 4713, ஆர். 5814, ஆர். 5843) இச்சுவடிகள் அனைத்தும் இப்பதிப்பில் ஒப்புநோக்கப்பெற்றன. திருவனந்தபுரம் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலும், திருப்பதி திருவேங்கடவன் கீழ்த்திசை ஆய்வு நிறுவனத்திலும் 'அகத்தியர் குழம்பு' என்னும் தலைப்பில் சுவடிகள் இருப்பதாகத் தெரிகிறது. ஆனால், இப்பதிப்பில் அவை ஒப்புநோக்கப்படவில்லை.

இந்த ஓலைச்சுவடிகளை அடிப்படையாக வைத்துக்கொண்டே இந்நூல் வெளியிடப்படுகிறது. திரு வே. கந்தசாமி முதலியார் அவர்களின் ஆத்மரட்சாமிர்தம் என்னும் வயித்திய சார சங்கிரகம், திரு எஸ். கிருஷ்ணராவ் அவர்களின் சகஸ்ர சித்த யோகம், ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலரில் வெளியான பேரா. டாக்டர் ந. சேதுரகுநாதன் அவர்களின் அகத்தியர் குழம்பு என்னும் கட்டுரை திரு வே. கந்தசாமி முதலியார் அவர்கள் பதிப்பித்த தன்வந்திரி வைத்திய காவியம் 1000, மேற்படியாரின் வைத்திய மூலிகை அகராதி, திரு குரு. இராமசாமிக்கோன் அவர்கள் பதிப்பித்த யூகி முனிவர் கும்மி-1000, சரவணபுரம் சண்முக முதலியாரின் அகத்தியர் அமுத கலைஞானம் 1200, ஹகீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர்களின் வைத்தியத் திருப்புகழ், டாக்டர் ம. சன்முகவேலு அவர்களின் நோய்களுக்குச் சித்தப்பரிகாரம் ஆகிய அச்சுப்புத்தகங்களில் இடம்பெற்றுள்ள அகத்தியர் குழம்பு பற்றிய செய்திகளும் இந்நூலின் பின்னிணைப் பாகத் தரப்பட்டுள்ளன. செல்வி தி. லலிதா அவர்களால் பதிப்பிக்கப் பெற்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் வெளியிடப்பெற்ற மருந்து செய்முறைகள் என்னும் நூலிலும் அகத்தியர் குழம்பு இடம் பெற்றுள்ளது (பக். 55-60). இது திருவனந்தபுரச் சுவடி களின் அடிப்படையில் பதிப்பிக்கப்பெற்றது.

சித்த வைத்தியத்திரட்டில் 14 பாடல்கள் உரையுடன் உள்ளன (பக். 171). இதில் பத்தாவது பாடலில் பத்தியம் கூறப்பட்டுள்ளது. இப்பத்திய முறைகள் சின்னவேடன்பட்டிச் சுவடியில் 54 ஆவது பாடலில் இடம்பெற்றுள்ளன. மற்றச் சுவடிகளிலோ அச்சுப் பதிப்புகளிலோ பத்தியம் சொல்லப்படவில்லை.

சிறுமணவூர் திரு முனிசாமி முதலியார் அவர்களுடைய 'அனுபோக வயித்திய பிரம்ம ரகசியம்' (முதற் பாகம். 1923, பக். 33-37) என்னும் நூலில் 'அகத்தியர் மகா குழம்பு' என்ற பெயரில் 25 பாடல்கள் உரையுடன் உள்ளன. இதில் மனோசிலை, ரசம், தாளகம், பொரிகாரம், நாபி ஆகிய ஐந்து சரக்குகளையும் பச்சையாகக் கூட்ட வேண்டும்; சுத்தி செய்ய வேண்டுவதில்லை எனக் கூறப்பட்டுள்ளது.

திரு வே. கந்தசாமி முதலியார் அவர்களுடைய ஆத்ம ரட்சாமிர்தம் என்னும் வைத்திய சார சங்கிரகத்தில் (1905, பக்.518)

அகத்தியர் குழம்பு உரைநடையில் கூறப்பட்டுள்ளது. இதில் கடுகுக்குப் பதில் கடுகுரோகிணி சேர்க்கப்பட்டுள்ளது. மேலும், காட்டாமணக்கு முத்துப்பருப்பு 5 வராகன் சேர்க்கப்பட்டுள்ளது. ''தாங்கிய பச்சை பாதி'' என்பது இந்நூலில் காட்டாமணக்குப் பருப்பு எனக் கொள்ளப்பட்டது. இச்செய்முறை இன்றும் பல இடங்களில் நடைமுறையில் இருப்பதாகத் தெரிகிறது. சின்ன வேடன்பட்டிச் சுவடியில் 54 பாடல்களில் உள்ள அனுபானங்கள் யாவும் இந்நூலில் சொல்லப்பட்டுள்ளன.

திரு எஸ். கிருஷ்ணராவ் அவர்களின் சகஸ்ர சித்தயோகம் (இரண்டாம் பாகம் குழம்பு வர்க்கம், பக். 8) அகத்தியர் குழம்பைக் கூறுகிறது. இதில் சுத்திசெய்யப்பட்ட ரசம், தாளகம், மனோசிலை, வெங்காரம், இந்துப்பு, கடுகுரோகிணி, பெருங்காயம், கருஞ்சீரகம், அரிசித்திப்பிலி என்னும் ஒன்பதும் வகைக்கு ஒரு கழஞ்சு, வாளம் 9 கழஞ்சு என மூலப்பொருள்கள் சொல்லப்படுகின்றன. இவற்றுள் முதல் ஐந்தை முறைப்படி பொடித்துக்கொண்டு, மற்ற வற்றுள் வாளத்தைத் தவிர நான்கையும் பொன்னிறமாய் வறுத்துப் பொடித்து வத்திரகாயஞ்செய்து, முன் மருந்துடன் கூட்டியரைத்துக் கலக்கவேண்டும். பிறகு வாளத்தைச் சிற்றாமணக் கெண்ணெய் தெளித்து வறுத்து நான்கு சாமம் நன்றாக அரைக்க வேண்டும். வாளத்தை ஒவ்வொரு பருப்பாகக் கூட்டி அரைப்பதே இம்மருந்தின் இரகசியமான கைமுறை என்பதும் இரசத்திற்குப் பதில் இரசபதங்கத்தைக் கூட்டுவது சாலச் சிறந்தது என்பதும் இந்நூல் காட்டும் புதிய செய்திகளாகும்.

பேரா. ந. சேதுரகுநாதன் அவர்கள் தம் அகத்தியர் குழம்பு என்னும் கட்டுரையில் (ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டு ஆராய்ச்சிக்கட்டுரைகள் தொகுதி 3, 1981, பக். 386 - 394) பச்சை என்பதற்குப் பல்வேறு நூல்களிலிருந்து மேற்கோள்காட்டி முட்டையின் மஞ்சட்கரு என்பதே சரியான பொருள் எனக் கூறுகிறார். அகத்தியர் குழம்பு செய்வதற்கு 5 கழஞ்சு முட்டை மஞ்சட்கரு விட்டு அரைத்தல் வேண்டும் எனக் கூறும் இக்கட்டுரை அதை நிறுத்து எடுப்பது எவ்வாறு என விளக்கவில்லை. மேலும், இக்கட்டுரையில் கூறப்பட்டுள்ள 54 அனுபானங்களை எந்த நூலிலிருந்து எடுத்தாண்டுள்ளார் என்ற குறிப்பும் கொடுக்கப்பட வில்லை.

A. இதுவே உண்மையான அகத்தியர் குழம்பு என்றும் உறுதி கூறியுள்ளார்.

B. இதனை முகர்ந்தால் புண் உண்டாகும் என்றும் கூறப்படுகிறது.



டாக்டர் ம. சண்முகவேலு அவர்களின் 'நோய்களுக்குச் சித்தப்பரிகாரம்' என்னும் நூலில் (1972, பக்கம் 334-339) அகத்தியர் குழம்பைக் கூறி இதுவே உண்மையான அகத்தியர் குழம்பு என்றும் உறுதி கூறியுள்ளார். இவர் கந்தகத்தைப் பதினொன்றாவது சரக்காகச் சேர்த்துள்ளார். புச்சை என்பதற்கு வேப்பிலை எனப்பொருள் கொண்டுள்ளார். ஆனால், வேப்பிலைச் சாற்றைவிட்டு அரைக்க வேண்டும் எனக் கூறவில்லை. வேப்பிலையை நிறைய எடுத்துக் குடிநீரிட்டுச் சுண்டவைத்து வடிகட்டி அதில் பாதரசம் அல்லது வாலைரசம் சேர்த்துக் குழம்புப்பதம் ஆகுமட்டும் அரைத்து மற்றச் சரக்குகளுடன் கல்வத்திலிட்டு அரைக்கவேண்டும் என்கிறார்.

தன்வந்திரி வைத்திய காவியம் 1000 (1888) காட்டும் அகத்தியர் குழம்பு வேறொன்றாகும். இதில் இடம்பெற்ற நான்கு பாடல்களில் எங்குமே அகத்தியர் குழம்பு என்ற பெயர் சுட்டப் பெறவில்லை. இக்குழம்பு வாளம், இலிங்கம், பூரம், வெங்காரம், கடுக்காய்த்தோல், வெடியுப்பு, முப்பூ, பத்திரி, சுக்கு, வாய்விளங்கம், வாகை, ரோகிணி, திப்பிலி என்னும் சரக்குகளை அளவுப்படி தேங்காய்ப்பாலில் அறுபது சாமம் ஆட்டுவதால் கிடைக்கிறது.

யூகிமுனிவர் கும்மி 1000 (1936, பக். 44-46) என்னும் நூல் காட்டும் அகத்தியர் குழம்பு வருமாறு:- பெருங்காயம், கடுகு ரோகிணி, இந்துப்பு, இரசம், வெங்காரம், மனோசிலை, திப்பிலி, கருஞ்சீரகம், சுக்கு இவற்றிற்குச் சமஎடை வாளத்தைக் கருக்கிச் சேர்த்து ஆவின் மோர்விட்டு இரண்டு சாமம் அரைக்க வேண்டும்.

டாக்டர் இரா. தியாகராசன் அவர்களின் 'தேரையர் சேகரப்பா' (1979, பக். 55) என்னும் நூலில், சுத்தி செய்த வாளம், இந்துப்பு, கடுகு, ஓமம், மிளகு, சீரகம் ஆகியவற்றைச் சமனெடை எடுத்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சேர்த்து ஆறுநாள் அரைத்து ஒரு சாமம் எரித்துக் குழம்புப் பதத்தில் எடுக்க வேண்டும் எனச் சொல்லப்பட்டுள்ளது. இதனை மிளகளவு உருட்டி உட்கொள்ள வேண்டுமென்றும், இதனை முகர்ந்தால் புண் உண்டாகும் என்றும் கூறப்படுகிறது.

மேற்படியாரே இரண்டாம் பதிப்பாக வெளியிட்டுள்ள 'வைத்தியத் திருப்புகழ்' என்னும் நூலிலும் (1975, பக். 35) ஓர்

அகத்தியர் குழம்பு இடம் பெற்றுள்ளது. இதுவும் வேறான ஒன்றே. மஞ்சள், கடுக்காய்த் தோல், கடுகுரோகிணி, அரிசித்திப்பிலி, கருநாபி. கருஞ்சீரகம், கடுகு, பொரித்த பெருங்காயம், சுத்திகரித்த மடலரிதாரம், இரசம், பொரித்த வெண்காரம், இந்துப்பு, தூய்மை செய்யப்பட்ட மனோசிலை, கொட்டாங்கச்சிக்கரி, பனைவெல்லம், உத்தாமணிச் சாறு, தேங்காய்ப்பால் முதலியன இதில் சேருகின்றன.

டாக்டர் க. ச. உத்தமராயன் அவர்கள் குழம்பு என்பதற்குச் ''சில சாறுகளைக் கலந்தாவது, தனிச்சாறாகவாவது ஒரு சட்டியி லிட்டுச் சர்க்கரை கூட்டிச் சில சரக்குகளைப் பொடி செய்து துணியில் வடிகட்டி அதில் போட்டுக் குழம்புப் பதத்தில் காய்ச்சி வடித்து எடுத்துக்கொள்வதாகும். (உம்) கேசரிக்காய்க் குழம்பு இதுவல்லாமல் சில சரக்குகளைச் சேர்த்து நெய்ப்பசையுள்ள பொருள்களைக்கொண்டு அரைத்துக் குழம்புப் பதத்தில் எடுப்பதுவும் குழம்பாகும். (உம்) அகத்தியர் குழம்பு, கௌசிகர் குழம்பு'' என வரையறை கூறுகிறார் (சித்த மருத்துவாங்கச் சுருக்கம் 1953). ஆனால், அகத்தியர் குழம்பு அரைத்தெடுக்க மெழுகுப் பதமாக வருமேயன்றிக் குழம்புப் பதமாக வராது.

செல்வி தி. லலிதா, எம். ஏ, பி. எட். அவர்களின் 'மருந்து செய்முறைகள்' என்னும் நூலில் (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1985, பக். 55-60) ஓமத்திற்குப் பதிலாகத் திப்பிலி 1 கழஞ்சு கூறப் பட்டுள்ளது. பத்துக் கழஞ்சு வாளம் முழுமையையும் ஆமணக் கெண்ணெயில் வறுத்துக்கொள்ள வேண்டும் எனச் செய்முறை கூறப்பட்டுள்ளது. ஆனால், மூலப்பாடலில் உள்ள ''வாங்கிய கழஞ்சுக் கொப்பாய் வாளமும் வறுத்துப்பாதி தாங்கிய பச்சைப் பயறு சமன்முறை போக்கி நீக்கி'' என்ற பகுதி தெளிவாக விளக்கப்படவில்லை.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 1983 இல் நடைபெற்ற சித்த மருத்துவக் கருத்தரங்கையொட்டி அகத்தியர் குழம்பு என ஒரு சிறுநூல் ஆய்வாளர்களின் தனிச் சுற்றுக்காக மட்டும் எம்மால் பதிப்பிக்கப்பட்டது. தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஒரு சுவடி, தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தின் மூன்று சுவடிகள், சித்த வைத்தியத் திரட்டு, நோய்களுக்குச் சித்தப்பரிகாரம், பச்சிலை மூலிகை விரிவகராதி ஆகிய மூன்று அச்சு நூல்கள் ஆக

எழு கருவிகளால் அப்பதிப்பு அமைந்தது. அப்பதிப்பைப் பார்வை யிட்ட சித்த மருத்துவ அறிஞர்களும் தமிழறிஞர்களும் அப்பதிப்பு முறையைப் பெரிதும் பாராட்டி எம்மை ஊக்குவித்தனர். ஆனால், அப்பதிப்பு வெளி உலகத்திற்கு அறிமுகமாகவில்லை.

இப்பதிப்புக்கு மூலபாடமாக ஒரு புதிய சுவடி கிடைத்தது. அது கோவை சின்னவேடன்பட்டியைச் சேர்ந்த உயர்திரு ஆர். கிருஷ்னான் அவர்களின் சுவடி ஆகும். அதில் 54 பாடல்கள் உள்ளன. இச்சுவடியின் 4 ஆம் பாடலில் இம்மருந்தின் பெயர் அகத்தியர் குழம்பு என்றும், 47 ஆம் பாடலில் தட்சிணாமூர்த்திக் குழம்பு என்றும் கூறப்பட்டிருப்பது சுவையான செய்தியாகும். மேலும், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள நான்கு சுவடிகளும் இப்பதிப்பில் புதியதாக ஒப்புநோக்கப் பயன்படுத்தப்பெற்றன. மேலும், பல அச்சு நூல்களும் இப்பதிப் பிற்குக் கருவிகளாக உதவி செய்தன.

சுவடிகளிலிருந்த எழுத்துப்பிழைகள் களையப்பட்டுச் சிறந்த பாடங்கள் தெரிவு செய்யப்பட்டன. முக்கியமான பாட பேதங்கள் அடிக்குறிப்பில் காட்டப்பட்டுள்ளன. பாடங்களைத் தேர்ந் தெடுக்கும் போது யாப்பமைதியும் கருத்தில் கொள்ளப்பட்டது. என்றாலும் கீழ்க்கண்ட பாடலடிகள் யாப்பிற்குப் பொருந்த வில்லை. (முதல் எண் பாட்டெண்; மற்றவை அடிகளின் எண்கள்) 8-2, 3; 23-3; 25-3; 33-2, 3; 37-1; 39-1; 52-4. மேலும், பொருள் முற்றுப்பெற்றதாகக் கூறப்படும் சித்த மருத்துவ நூல் மரபும் ஈற்றுப் பாடலில் காணப்பெறவில்லை. எனவே, மேலும் சில பாடல்களும் இருக்கலாம் போலும். இனியும் வேறு சுவடிகள் கிடைத்தால் இப்பதிப்பை மேலும் செம்மையுடைய தாக்கலாம்.

மூலபாடமும், சுருக்கமாகத் தெளிவுரையும் இதில் தரப்பட் டுள்ளன. அடுத்து அகத்தியர் குழம்பைப்பற்றிய பிறநூற் பகுதிகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. அகத்தியர் குழம்பில் சேரும் மருந்துச் சரக்குகள் மற்றும் துணை மருந்துகளின் மருத்துவப் பயன்கள் மருத்துவ நூல்களிலிருந்து திரட்டித் தரப்பட்டுள்ளன. மருந்துப் பொருட்களின் குறிப்பகராதியில் விஞ்ஞானக் கலைச் சொற்களும், ஆங்கிலப் பெயர்களும் இயன்ற அளவு பட்டியலிடப்பட்டுள்ளன. இறுதியில் பாட்டு முதற் குறிப்பகராதி இணைக்கப்பட்டுள்ளது.

இதனை நூலாக வெளியிடப் பணித்து, நூல் எவ்வாறு அமைதல் வேண்டுமென அறிவுரை கூறி வழிநடத்திச் செல்லும் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கட்கு எம் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இதற்கு மூலபாடமாக உள்ள பாடல்களடங்கிய சுவடியை வழங்கிய சின்னவேடன்பட்டி உயர்திரு ஆர். கிருஷ்ணன் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரியது. தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சித்த மருத்துவத்துறைத் தலைவர் முனைவர் ஜ. சாதிக் அவர்களின் ஒத்துழைப்புக்கும் கடப்பாடுடையோம். தமது சுவடி நூலகங்களிலுள்ள சுவடிகளை இப்பதிப்புக்குப் பயன்படுத்த உதவிய தஞ்சை சரசுவதி மகால் நூலகம், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் ஆகிய நிறுவனங்களின் நிர்வாகி களுக்கும் எங்கள் நன்றி உரியது.

அகத்தியர் குழம்பின் முந்தைய பதிப்பைக் கண்ணுற்றுப் பாராட்டி ஊக்கம் அளித்த மருத்துவ அறிஞர்களுக்கும், தமிழ் வல்லார்களுக்கும் எம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். சித்த மருத்துவ உலகம் இத்தகைய ஆக்கப்பூர்வமான பணிகளுக்கு மேலும் மேலும் ஒத்துழைப்பு நல்கி ஊக்குவிக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறோம்.

தமிழ்ப் பல்கலைக் கழகம் — சே. பிரேமா
16—3—1986 — ப. வெ. நாகராசன்.

# அகத்தியர் குழம்பு

1. †பருவதம் தன்னில் வாழும்
பரமனார் அருளி னாலே
பொறுமையால்[1] உலகில் வாழும்
புண்ணிய சனங்க ளுக்கும்
உறுபலன் நோவு வந்தால்
உண்மையாய்த் தீரு மென்று[2]
பிரபல மிகவே நன்றாய்ப்[3]
பேசிய மருந்து கேளே[4].

2. பேசிய மருந்து கேளாய்
பெருங்காயம் கடுகிந் துப்பு
வீசிய ரசம்வெங் காரம்[5]
விடமனோ சிலையு மோமம்[6]

---

† இப்பாடல் ச. ம. நூ. அ. எண். 159 ஏ (பி) யிலும் சுவடி எண் 276 இலும், பச்சிலை மூலிகை விரிவகராதியிலும் காணப் படவில்லை.

பாட வேறுபாடு:

1 அ) பெருமையாய் ஆ) அருமையாய்
2 அ) உறுபல வியாதி வந்தால் ஆ) உறுபல வியாதி வந்தால் தீரவென்றுண்மையாக இ) ஒரு பல வியாதி வந்தால் ஈ) வருபல வியாதி யெல்லாம் மாயவேயுண்மையாய்
3 அ) பெருகலை முனிவர் தாமும் ஆ) பிரபல முனிவர் தானும்
4 பேசினார் முனிவர் தாமே
5 அ) பொற்காரம் ஆ) வீசிய சாரம் சூதம்
6 கூட்டி

ஆசிலா அரிதா ரத்தோடு
அருங்கருஞ் சீர சுந்தான்[7]
மாசிலா மருந்து பத்தும்
வகைவகைக் கழஞ்சு வாங்கே[8].

3. வாங்கிய கழஞ்சுக் கொவ்வ[9]
வாளமும் வறுத்துப்[10] பாதி
தாங்கிய பச்சை பாதி[10அ]
சமன்முளை[11] போக்கி நீக்கித்
தீங்கிலா மருந்து பத்தும்
சேரவே அரைக்கக் காந்தும்[12]
ஓங்கிய மோரும் சோறும்
உண்டுநீ[13] யரைத்துக் கூட்டே.

4. கூட்டிய[14] மருந்தின் பேரும்
அகத்தியர் குழம்ப தாகும்
ஈட்டிய சுரமே சுக்கு
இருமலே கடுக்காய்த் தூளாம்[15]

---

7 அ) ஆசரிதாரம் வாளம் மடல்துத்தம் கருஞ்சீரகம் இராமபாணம் வாசிய இவ்வகை வகை வகைக்க கழஞ்சு வாச்சே.
ஆ) ஈசில் திப்பிலியோ டொக்க மிதை சத கட்டரிதாரந்தான்
இ) ஆசிலா திப்பிலியும் அதட்டிய தாரத்தோடு
ஈ) ஆசுதிப் பிலியு மொக்க அரிதாரந் தகட தாகு
8 மாசில கருஞ்சீரகம் வகை வகைக் கழஞ்சு வாங்கே
9 அ) வாங்கிய மருந்துக் கொக்க ஆ) கழஞ்சுக் கொப்பாய்
10 அதுக்கு 10அ. பயறு
11 அ) சமன் முளையிலை ஆ) சமன் முளைத்தோடு
12 காந்தல்
13 அ) உண்டுபின் ஆ) உண்டு நீ நன்றாயாட்டே
14 அட்டிய
15 கடுக்காய்ச் சாறு

வாட்டிய குளிர்சு ரங்கள்
வகைசுக்கு மிளகு கூட்டு[16]
நீட்டிய[17] ரத்த மூலம்
நெய்யொடு மேதிப் பாலே[18]

5. பாலெனும் மொழியே கேளு[19]
பாண்டொடு வெப்புப் பாவை[20]
மேலுநீ ராமை சோகை[21]
மிளகுதூள் வெள்வெங் காயம்
சிலமாம்[22] சன்னிக் கெல்லாம்
தேனிஞ்சிச் சாற தாகும்[23]
ஏலவே சுகசன் னிக்கு[24]
வேம்பினி லிடுகண் ணுக்கே[25]

---

16 அ) மிளகுமாகும் ஆ) மிளகு கொள்ளாம் இ) மிளகுத் தூளாம்

17 அ) வாட்டிய ஆ) பாட்டினில் இ) பாட்டிய

18 அ) நெய்யோடு பாலாம் ஆ) நெய்யினில் பாலாம்
இ) நெய்யினில் மேதிப் பாலே, ஈ) பசுவினெய் மேதிப் பாலே.

19 அ) பாலினன் மொழியாய்ப் பாண்டு
ஆ) பாலினின் ஒழியும் பாண்டு
இ) பாலையும் வெளுக்கும் சோகை

20 அ) மகோதரம் பெருவயிறு ஆ) மகோதரம் / பெருவியாதி

21 அ) மேலு நீராம்பல் சோகை ஆ) மேலு நீராமை சூகை
இ) மேலு நீராமை யாகியவை

22 சாலவே 23 சாற்றி லாகும்

24 அ) ஏலவே சன்னி தோஷம் ஆ) ஏலுமாம் சன்னிக் கெல்லாம்
இ) காலனேர் சன்னிக்கெல்லாம்
ஈ) ஏலமாம் விடஞ்சன் னிக்கு

25 அ) வேம்பினில் கண்ணிலிட்டே
ஆ) விஷங்கட்குக் கண்ணிற்றீட்டே
இ) வேப்பெண்ணையில் கண்ணிலிட்டே
ஈ) கழற்கொடி முசுமு சுக்கை

6. இடுகணில் கடுகிற் பாதி
வீங்கில்கற் றாழஞ் சோறு[26]
வடிதயிர் சந்த னங்கள்
வைத்துநீ கட்ட மாறும்
படுபரு பிளவை வாழை
பக்கரை யாப்புப் புண்கள்
உடலுறு சிலந்திக் கெல்லாம்[27]
உமிழ்நீரால் குழைத்துப் பூசே.[28]

7. பூசிடு முலைக்குத் துக்கும்
புண்ணுக்கு மிதுவே யாகும்
சூசிகா வலிகுன் மங்கள்
தோன்றிடில் நொச்சிச் சாறாம்[29]

---

26 அ) யிருந்துகற் றாழஞ் சோறு
ஆ) வீங்கினால் கற்றாழஞ் சாறு
இ) வீங்குங்கற் றாழஞ் சோறு

27 அ) வடுவெருஞ் சிலந்தி யாகில்
ஆ) விடுபெறு சிலந்தி
இ) உடுபெறும் சிலந்தியாகில்
ஈ) விடுபடு சிலந்திக் கெல்லா

28 அ) உமிழ்நீரிற் பூச நன்றே
ஆ) அமுரறி மிகவும் பூசே
இ) உமிழ்நீரால் உரைத்துப் பூசே
ஈ) மிகவுநீ நீரில் பூசே

29 அ) கூசிடு வாத சூலை குட்டங்கள் நொச்சிச் சாற்றில்
ஆ) கூசிடு குன்மந் தோன்றில் கொம்மட்டிக் காயின் சாற்றில்
இ) காசிகர வாத சூலை குட்டமே நொச்சிச் சாற்றில்

காசமாம் பீனி சங்கள்
 கண்டிடில் கஞ்சாச் சாறாம்[30]
நாசமாம் வாத சூலை
 நலம்சுக்கு மிளகு பாரே[31]

(வேறு)

8. பாராய் கபால வலிமுதலாய்
 பசாசு பறக்குந் திரிப்புகையால்
நீரா யெடுக்கும் நீர்ச்சிறுப்பும்
 நீர்க்கல் லடைப்பு தாழைவிழுதில்[32]
தீராக் கிரந்தி கரப்பான்முதல்[33]
 தீரும் குப்பிச் சாறதனில்[34]
சீராய்க் கெடுக்கும்[35] பல்விஷமும்
 தீரும் தீரும் திரிபிடியே.

---

30 அ) ஆசிகா வலி குன்மங்கள் தொக்குமே நொச்சிச் சாற்றில்
ஆ) பாசமாம் வாய்வு மாம்பல் பலவித குணத்திற்கெல்லாம்
இ) காசங்கள் திரிகடுகு தேனினில் கலந்து தின்ன
ஈ) ,, ,, நெய்யினில் கலந்து தின்ன

31 அ) பாசமாம் வாய்வு வாதம் மருந்துக்கு நொச்சி பாரே
ஆ) நேசமாம் நொச்சி சுக்கில் நிச்சயஞ் செய்து பாரே
இ) நறுசுக்கு நொச்சி பாரே

32 அ) நேரே யெடுக்கு நீர்ச்செறிப்பு
நீர்க்கல் லடைப்பு தாழை விழுதுச் சாறு
ஆ) நேரி யெடுக்கும் நீர்ச்சொரிப்பு
நீர்க்கல் லடைப்பு தாழை விழுதில்

33 அ) தீராக் கிரந்தி பறங்கிமுதல்
ஆ) தீரும் தீரா கபால கிரந்தி

34 சாற்றிலிட

35 அ) சீராய் கடித்த ஆ) சீராய் கொடுக்க
இ) தீரா அரவம்

9. பிடிக்குஞ் சீலை யம்மிதனில்[36]
பிரட்டி யுருட்டித் திரியதனை[37]
இடிக்கும் வலிக்கும் தலைவாதம்
இடறிப் போகும் திரிகாட்டே[38]
குடிக்கும் கியாழம் வெள்ளுள்ளி
கொடிய கழற்சி யிலையுடனே[39]
அடிக்குஞ் சன்னி பதின்மூன்றும்
அனுபா னஞ்செய் நூல்விதியே.[40]

---

36 அ) பிடிக்குந் திரிக்கு முன்னரைக்கில்
ஆ) பிடிக்கும் நமக்கும் அரைத்த அம்மி
இ) பிடிக்கும் திரிக்கு முன்னரைத்த

37 அ) பிரட்டி சீலையை யுலரவைத்து ஆ) பிள்ளையுந் தாயும் அம்மிதனில்

38 அ) பிடிக்கும் வலிக்கும் தனுர்வாதம்
இசுப்பு வலிப்பு யிவை தீரும்
ஆ) பிடிக்கும் வலிக்கும் தனுர்வாதம். வலிக்குத் திரிகாட்டி
இ) யிடிக்கும் வலிக்கும் தனுர்வாதம்
இளைத்தே சாடும் புகை காட்ட
ஈ) உடுக்கும் சீலை தனில்துவட்டி
உருட்டித் திரியை உலரவைத்து

39 அ) குடிக்கும் கியாழம் கொடிவேலி
கொடிய கழற்சி முசுக்கை நொச்சி
ஆ) கொடுக்கும் கியாழம் வெள்ளுள்ளி
கொடிய கழற்சியிலை முசுக்கை
இ) குடிக்கும் கியாழம் கழற்சியிலை
கொடிய நொச்சி மாவிலங்கம்
ஈ) வடிக்கும் பசுவின் நெய்யெண்ணெயில்
மாவாய் விளக்கில் திரிபோட்டு

40 அ) அடவே சன்னி பதினெட்டு மனுபானத்தின் விதத்திலிடே
ஆ) மிடுக்கு சன்னி பதினெட்டும்
அனுபானம் செய் நூல் விதியே
இ) துடிக்க எனத்து முண்டுசைய சூலைப்புரைப்புண்போம் விதியே

10. விதியாம் மருந்து இதுவல்லால்[41]
வேறே தேட வேண்டாங்காண்
பதியாய் நாலா யிரத்துடனே
பகர்நாற் சதநாற் பத்தெட்டும்[42]
மதியால் தேகக் குறிப்பறிந்து
வகையா மனுபா னத்திலிடப்[43]
பதியே விடநோய் போமென்று
பண்பாய் முனிவர் சொன்னாரே.[44]

---

41 அ) விதியால் வந்து மருந்தெல்லாம்

42 அ) பகரும் வியாதியெல்லாம் போம்
ஆ) மதியால் தேகக் குறிப்பறிந்து
மருவும் வியாதி குணங்களெல்லாம்

43 அ) மதியால் வியாதிக் குறிப்பறிந்து
வகையா மனுபானந் தன்னில்
ஆ) மதியால் தேகக் குறிப்பறிந்து
மருந்தின் அனுபானம் செய்யவல்லோர்
இ) முதியோர் உரையின் படியறிந்து
முறையாயனுபானத்திலிட

44 அ) துதியா மருந்து பணவெடைதான்
சொன்னோம் பத்தியம் நீ காரே
ஆ) மதியா யிதனைக் குறிப்பறிந்து
வகுத்துச் சொன்னார் மாமுனியே
இ) துதியாய்ச் செய்ய வல்லோர்க்குச்
சொன்னார் பொதிகை வாழ்முனியே
ஈ) துதியா யிணங்கும் குறிப்பறிந்து
தூய வகை யனுபானஞ் செயில்
உ) சதியாய்ப் பிணிகள் முழுதினும்போம்,
தப்பாதென்னு தமிழ்முனி சொன்னாரே

11, சொன்னார் மடவார் தங்களுக்குச்
சுதனாம்[45] கர்ப்பம் வரும்படிகேள்
மின்னே அரசங் கொழுந்துதன்னை
மிக்கா வின்பால் விட்டரைத்து
முன்னோர் குழம்பில் பணவெடைதான்
மூட்டி மூன்று நாள்கொடுக்கப்[46]
பொன்னேர் புதல்வ ருண்டாவர்[47]
புவியோர்க் குறுதி கண்டீரே.

12. கண்டீர் நாவல் பட்டைதனைக்
கருத்தாட் டின்பால் விட்டரைத்துக்[48]
கொண்டீர் சீரகப் பொடியுடனே
குழம்பில் பணவெடை தான்கூட்டி[49]
உண்டீர் சூதக வாயுவுடன்
உணர்ந்த வலியுந் தான்தீரும்[50]
வண்டார் குழல்சேர் மடமானே
மலைசேர் முனிவர் வகுத்ததுவே.

---

45 சுகமாய் கெற்பம்

46 கொள்ள

47 அ) பொன்னென் புதல்வ ருண்டாகும்
ஆ) பொன்னாம் புதல்வ ருண்டாகும்

48 கருத்த ஆட்டுப் பாலதனில்

49 குழைத்துப் பணவெடை தான்கொண்டால்

50 அ) பண்டே சூத கத்தில்வரும் உயர்ந்த வாய்வு உடன்தீரும்
ஆ) பண்டோர் சூதக வாய்வுடனே
பருத்த கர்ப்ப வாதமும் போம்

13. வகுத்த பிரமன் விதியாலே[51]
வரும்சூ தகவாய் வுடன்திரட்சி[52]
மிகுத்த வலியும் தீருமென
மிகவே சொன்னார் விரகுடனே[53]
பகுத்த நொச்சிச் சாறதனில்
பாங்காய்ச் சாரணை வேர்மிளகும்[53ஏ]
தொகுத்த குழம்பில் பணவெடைதான்
சொன்னார் கேட்டுக் கொள்வீரே[54]

14, கொள்ளும் பிறவிச் சூதகத்தில்[55]
கொடுக்கும் மருந்து வகைகேளாய்
உள்ளி முருங்கைப் பட்டையுடன்
உயர்ந்த புங்குள ருக்கின்வேர்[55ஏ]
விள்ள அரிதாம் திருகுகள்ளி
விரைசேர் இஞ்சி ரசமதிலே[56]
தெள்ளும் குழம்பில் பணவெடைதான்
சேர்த்துக் கொடுக்க வல்லீரே.

---

51 அ) உரையாலே ஆ) வகையாலே
52 அ) வாய்வுடனே ஆ) வாயு திரட்சி
இ) வருஞ்சூ சிகமாம் வாயுவுடன்
53 அ) மிகுந்த வலியுந் தீருமென்று மிளகுஞ் சுக்கும் பாகமதில்
ஆ) திரட்சி மிகுந்த வலிதீரும் தின்னச் சொன்னார் விரகுடனே
இ) மிகுந்த வலியுந் தீருமென்று, சொன்னார் முனிவர் விதமுடனே
ஈ) மிகுந்த திரட்சி வலிதீர மிகவே மாமுனி.........
53ஏ. பங்கஞ் சாறணைவேர் மிளகுசுக்கு
54 அ) தொகுத்த குழம்பில் பணவிடைதான் கொள்ளச் சொன்னார் கொள்வீரே
ஆ) திகைத்த பிரமி சோகமது தீரும் கற்கண் டினில்கொள்ளே
55 அ) கொள்வீர் புறவீச்சு தனக்குக் 55 ஏ. எருக்கிலைவேர்
56 அ) வள்ளல் அரிதாம் திருகுகள்ளி
வகைசேர் இஞ்சிச் சாறதனில்
ஆ) விசைசே ரிஞ்சித் சுரசத்தில்

15. வல்லீர் நெஞ்சு வலிதனக்கு
வகையாய் மருந்து தனைக்கேளீர்
வெல்லும் லவங்கப் பத்திரியும்
விரைசேர் கிராம்பு அதிமதுரம்
சொல்லும் தாளிசப் பத்திரியும்
சிறந்த ஆவின் வெண்ணெயுடன்
நல்ல[57] குழம்பில் பணவெடைதான்
நயமாய்க் கூட்டி அருந்திடுவீர்.[58]

16.† அருந்தும்[59] தாளி யிலையவுரி
ஆவின் வெண்ணெய் அதுவுடனே
பரிந்து விவரஞ் சொல்லக்கேள்
பாங்கா யனுபா னத்துடனே
பொருந்தும் குழம்பில் இரண்டுபணம்
போலே சேர்த்துக் கொடுப்பீரே
விரிந்த வினையும் விரியன்விஷம்
விக்கம் தீரும் அறிவீரே.[61]

---

57 அல்லே

58 அ) அருந்தத் தீரும் கண்டீரே
ஆ) அளவாய்க் கூட்டி அருந்திடுவீர்

59 அரிந்த

61 வருந்தா திதனை நீருண்ண
வலிபோம் சொன்னோம் மறவீரே

† சரசுவதி மகால் சுவடியில் இப்பாட்டின் இரண்டாமடி காணப்படவில்லை. மருந்து செய்முறைகள் நூலில் இப்பாடல் வருமாறு:

அருந்துந் தாளி இலைஅவுரி
ஆவின் வெண்ணெய் அதுவுடனே
பொருந்துங் குழம்பு ரெண்டுபணம்
போலே சேர்த்துக் கொடுப்பீராய்
பெருந்தீ வினையால் விரியன்(விஷம்)
பேர்ந்து தீரும் பெரியோரே
வருந்தீர் நீரிம் மருந்தின்
வழியே சொன்னேன் மறவீரே. (பக். 57-58)

17. அறிவீர்[62] நாவல் கொழுந்துடனே
ஆய்ந்த[63] மிளகு விராகன்ரெண்டு
முறையா யருந்த வெற்றிலையில்[64]
முன்னங்[65] குழம்பு பணவெடைதான்
பறையா தெல்லா மொன்றாகப்
பரிந்து கொடுக்க வல்லீரேல்[67]
பிறவாய்[68] நாகக் கடிவிஷமும்
பிணியுந்[69] தீரும் பெரியோரே.

18. தீரும் தேளின்[70] விஷந்தனக்குச்
சேய கத்தி[71] துளசியிலை[71a]
சேரும் குழம்பில் பணவெடைதான்
திரமாய்ச் சேர்த்துக்[72] கொடுத்துவிட
ஊருங்[73] கடிவாய் உமிழ்நீரில்
ஊட்டிப் பூச விஷம்போங்காண்
வாருங் குயிலே மடமானே
வழலைக் கடிஅனு பானங்கேள்[74]

---

62 மறிவீர்
63 வாய்த்த
64 அமரும் வெள்ளிலைதான்
65 மூன்று
67 பிழிந்து கொடுப்பீ ராகிலப்பால்
68 பிரவார்
69 பிடியும்
70 தெளியா
71 செய்யான்குத்து 71a துளிரிலையில்
72 சீராய்த் தடவிக்
73 ஊறும்
74 மருந்தது கேள்.

19. கேளாய் வெல்லம் புகையூறல்
கிளியே[75] மிளகு பேய்பிர்க்கில்
நாளே சென்று விரைமூன்றும்
நன்றாய்க் குப்பை மேனியின்பால்[76]
ஆளே வார்த்து முன்னேதான்
அரைத்த குழம்பில் பணவெடைதான்[77]
வேளே கொடுக்க வல்லீரேல்[78]
விடுமே வழலை விஷந்தானே.

20. தானே நெஞ்சு வலிதனக்குச்
சாற்று மருந்து தனைக்கேளாய்
மானே பழைய புளிவெல்லம்
வகையாய்ச் சித்திர மூலமுடன்
தேனே குப்பை மேனியின்பால்[79]
திரமாய் விட்டுச் சேர்த்தரைத்து
வானோர் குழம்பில் பணவெடைதான்
வகையாய்[80] கொடுக்க வலிபோமே.

---

75 இனிய

76 சாறு

77 அ) குழம்பிலரைத்து முன்னே அடவாய்க் கொடுப்பீரேல்
ஆ) ஆள வார்த்து அதனுள்ளே அன்பாய்க் குழம்பு பண விடைதான்

78 பறக்கும் பலவிஷமும்

79 மேனியின் சாறு

80 மருவி

21.† வலியே செய்யும் நீர்க்கட்டு
மாற மருந்து வகைகேளாய்
நலியா மிளகு வெங்காரம்[82]
நன்றாய்ப் பொரித்துக் கொண்டுடனே[83]
மெலியா இரண்டு வராகன்பொடி
மெய்யாய் ஆவின் நெய்யதனில்
பொலியக்[83a] குழம்பு பணவெடைதான்
புகழ்ந்தே கொடுக்கப் பிணிபோமே.

22. பிணியாய் விஷபா கத்தோடு[84]
பின்னும் வீக்கம் தான்தீரத்
துணிவாம் நொச்சிச் சாறுடனே
சொல்லுந் திரிகடுகு தான்கூட்டி
மணியாங் குழம்பில் பணவெடைதான்
வாகாய்ச்[85] சேர்த்துக் கொள்வீரால்
கெணியா[86] யெழுந்த வீக்கமெல்லாம்
கெடுமே[87] சொன்னோங் கேளாயே.

---

82 பொரிகாரம்
83 கண்டினுடன் 83a புலியாங்
84 விஷபாகத்திற்கு
85 வகையாய்
86 தெணியா
87 தீரும்

† சரசுவதிமகால் சுவடியில் இப்பாடலின் மூன்று அடிகளே உள்ளன.

23. கேளா யிந்த வகையெல்லாம்
கிளியே[88] பேதி உண்டானால்
பாளே மயங்கா வசம்புசுட்டுப்[89]
பாங்காய்க் கியாழம் வைத்ததனில்
சூளாம் ஆவின் வெண்ணெய்[90] பாக்களவு
சுருக்காய்ப்[91] போட்டுக் கொடுப்பீரால்
மீளா பேதி உள்ளதெல்லாம்
மின்னே தீரும் மெய்யிதுவே.

24. மெய்யாம் வசம்பு தானரைத்து
மிதமாய்க் கலக்கித் தண்ணீரில்
கையா லெடுத்துத் தானருந்தில்
கரையா நிற்கும் தான்பேதி
வையா மோரும்[92] பழச்சாறும்
வகையாய்ச் சேர்த்துத் தான்கொடுக்கப்
பையா பேதி தான்தீரும்
பதமாய்ச் சேர்த்துக்[93] கொடுப்பீரே.

25. கொடுக்க வசம்பு தான்முருங்கை
கூறும் ஈர்க்குக் கியாழமதாய்த்[94]
தடுக்கா யேந்திக்[95] கொடுப்பீரேல்
தானே நிற்கும் மலக்கழிச்சல்

---

88 அ) தீரும் ஆ) கெடியாய்
89 தட்டி
90 சூடாய் வெண்ணெய்
91 சுருக்காய்
92 ஏலம்
93 செய்து
94 அ) வகைக்கி யாழமதாய்
ஆ) கூறுமீர்க்கு திடபாகம் பண்ணி
95 வத்தி

அடுக்காய் வாந்தி மிகக்கண்டால்
ஆன[96] சீரகக் கியாழத்தில்
நடுக்காய்ச்[97] சர்க்கரை கூட்டியிட
நயமாய் வாந்தி தான்தீரும்.[98]

26.† திரும் பேய்க்குக் கடுகளவு
சார்ந்த குழம்பு தனையெடுத்துப்
பாருஞ் சுக்குத் தண்ணீரில்
பரிவா யுரைத்துக் கண்ணிலிடக்
காரும் பேயும் விட்டோடும்
கனத்த சுக்குக் குடிநீரில்
நேருங் குழம்பு தனைக்கொள்ள
நில்லா தோடும் மெய்சொன்னோம்.

27. சொன்னோம் வாத சுரந்தனக்குச்
சுக்குச் சீவி முக்கழஞ்சு
நன்றாய்த் தட்டி யிருநாழி
நன்னீர் வார்த்துக் கால்படியில்
முன்னோர் குழம்பில் பணவெடைதான்
மூட்ட மூன்று நாள்தானும்
மின்னே வாத சுரந்திரும்
விரும்பி யுரைத்தார் முனிதானே.

---

96 அரனார்

97 நடக்க

98 நலமாம் வாந்தி கண்டீரே.

† இது முதல் இனிவரும் பாடல்கள் அனைத்தும் கோவை சின்னவேடன்பட்டி திரு. ஆர். கிருஷ்ணன் அவர்களின் சுவடியில் மட்டும் காணப்படுகின்றன.

28. உரைத்தார் பித்த சுரந்தனக்கு
உற்ற கடுக்கா யைந்தெடுத்து
விரையைத் தள்ளி யேயரைத்து
வெந்நீர் மீதில் பணவெடைதான்
கரைத்து மூன்று நாள்கொள்ளக்
கதித்தே நின்ற பித்தசுரம்
புரத்தைக் கடந்து போகுமெனப்
புகன்றார் முனிவர் வகையறிந்தே.

29. வகைகேள் சேத்தும சுரந்தனக்கு
வறுத்துப் பொடிசெய் திப்பிலியைத்
தொகைசேர் குழம்பில் பணவெடைதான்
சுருக்காய் மூன்று நாள்கொள்ளப்
பகைசெய் சேத்தும சுரந்தீரும்
பாரிப் பேது சுரந்தனக்கு
நகைசேர் கிராம்பு மலைதாங்கி
நாபிக் குடிநீர் நண்ணுகவே.

30. நண்ணும் சன்னி தான்தீர
நயந்த சுக்குக் குடிநீரில்
உண்ணும் குழம்பு கழஞ்செடைதான்
உரைத்துப் போடு கண்தனிலே
சண்ணும் இஞ்சி வெள்ளுள்ளி
தயிலஞ் சுரசந் தன்னுடனே
பண்ணும் குழம்பு பணமருந்தப்
பறக்கும் சன்னி பதின்மூன்றே,

31. பதியாய் அடைந்த நீரடைப்பு
பரிய இன்னும் வகைகேளு
மதியா தறிவா யிளநீரில்
வைப்பா யிரண்டு பணவெடைதான்
நிதியே குடிக்க நீரடைப்பு
நிசமாய் இறங்கும் இன்னமும்கேள்
விதிவெள் ளரியின் பிஞ்சுதனில்
வைத்தால் குழம்பு நீர்விடுமே.

32.† விடுமே காடி தனில்குழம்பை
விரவிக் குடிநீ ரடைப்புவிடும்
கடுநீர் பாடு தான்திரக்
கழஞ்சு திப்பிலிக் குடிநீரில்
.............................
.................................
இடுமே குழம்பு பணமளவு
இப்ப விடுமே எழில்மயிலே.

33. மயிலே சத்தி எடுப்பதற்கு
வகைசேர் காடி தனில்குழம்பை
ஒயிலாய்ப் பணவெடை உள்ளருந்த
ஒடும் வாந்தி உனைவிட்டு
குயிலே இஞ்சிச் சுரசமதில்
குழம்பு பணவெடை தானருந்த
முயிலே மூல வாயுவிடும்
முனிவர் சொன்ன மொழியிதுவே.

34. இது (வே) மூல வகைதனிலே
எழுந்த சீதம் விழுவதற்கு
மதுவோர் குழம்பில் பணவெடைதான்
மதியப் பசுப்பால் தனில்தகரும்
பதுவே கொழுத்த ரத்தமதாய்ப்
பகர்வோர் குழம்பு பணமரையும்
எதுவாய்ப் பசுவின் நெய்தனிலே
இனிநீ அருந்தத் துயர்போகும்.

35. துயராம் கர்ப்ப விப்புருதி
சுளுவாய்த் தீர வகைகேளு
அயரா வெள்ளாட் டுப்பாலில்
அருந்தும் குழம்பு பணமிரண்டே

---

† சுவடியில் இவ்விருத்தத்தின் மூன்றாம் அடி எழுதாமல் விடுபட்டு விட்டது.

உயராச் சூதக் கட்டுடனே
ஓடும் கர்ப்ப விப்புருதி
நயமாய்ப் புதல்வ ருண்டாக
நல்லா வின்பால் தனில்குடியே.

36. குடியே தண்டுக் கட்டுவிடக்
கூசா தரசங் கொழுந்ததனை
அடியே பசுவின் பாலிலரைத்து
அதிலே குழம்பு பணம்சேர்த்து
விடியு மளவில் கொள்வீரால்
விரியம் மிகவும் உண்டாகும்
முடியும் நீங்கும் ஆண்மையுண்டாம்
முனிவர் உரைத்த மொழியிதுவே.

37. உரைத்த மகோதரம் தான்திர
உற்ற அகத்திச் சாறுதனில்
கரைத்த குழம்பு இரண்டுபணம்
கதிப்பாய்க் கொள்ளக் கலைந்தோடும்
நிரைத்தா மணக்கென் ணெய்தனிலே
நீங்கும் வாயுத் திரட்சியதும்
அரைத்த குழம்பில் கோடிபிணி
அறுகும் வகையும் அறிவாயே.

38. அறிவாய் அண்ட வாதமுடன்
அதிலே சுரமும் உண்டாகில்
பரிவாய் இஞ்சிச் சாறதனில்
பண்பாய்க் குழம்பு பணமருந்தக்
குறிவாய்க் கண்ட வாயுவறும்
குணமாம் இன்னல் குலமாதே
நெறியாய் வந்த மூலவாதம்
நீங்கும் தேங்காய்ப் பாலாமே.

39. நீங்கும் ஆனந்த வாயுவுக்கு
நிலைத்த கருப்புக் கட்டிதனில்
தாங்கும் மூன்று நாளருந்தத்
தணியாச் சுரமும் தணிந்துவிடும்

வாங்கு மிஞ்சிச் சாறுதனில்
வந்த வாயு சுரமுற்றும்
போங்காண் சொன்னோம் மடமயிலே
பொதிகை முனிவர் உரைத்ததுவே.

40. பொதிகை முனிவர் உரைத்தபடி
புனித மான குழம்புதனை
அதிக வாத பித்தமுடன்
ஐய மூன்றுக் கனுபானம்
கதிக வாத மிஞ்சிதனில்
கனத்த பித்தம் பசும்பாலில்
மதிக ஐயம் கடுக்காயில்
மானே திப்பிலி தனில்போமே.

41. போமே சன்னி பதின்மூன்றும்
பஞ்ச மூலக் குடிநீரில்
தாமே குன்மந் தானெட்டும்
தணியு மிஞ்சிச் சுரசமதில்
நாமே சொன்னோம் தாபசுரம்
நாலு வாத சுரந்தானும்
ஆமே குழம்பு வெல்லமதில்
மருவிக் கொடுக்க வாராதே.

42. கொடுக்க வாத சுரந்தனக்குக்
குடிநீர் நொச்சிச் சாறுதனில்
அடுக்கும் குழம்பு பணவெடைதான்
அருந்தச் சுரமும் தானகலும்
எடுக்கும் பித்த சுரம்தீர
இடுகொத் துமலிக் குடிநீரில்
நடுக்கும் ஐய சுரந்தீர
நல்ல திப்பிலிக் குடிநீரே.

43. குடிநீர் குழம்பு பணவெடைதான்
கொடுத்தால் இஞ்சிச் சுரசமதில்
அடிதான் குளிரும் விட்டோடும்
அரிய குழம்பின் கிருபையினால்

இடுநீ அகத்தி யிலைச்சாற்றில்
இனிய குழம்பு பணவெடைதான்
விடுமே ஒன்றே என்றுசொல்லி
விரும்பி முனிவர் விளம்பினரே.

44. விளம்பு மாறு காமாலை
விட்டே யோட அனுபானம்
தளும்பும் எலுமிச் சஞ்சாறு
தன்னில் குழம்பு பணவெடைதான்
உளும்பா தருந்த வேல்விழியே
ஒடு மாறு காமாலை
எளும்பும் ஆறாப் புண்தனக்கு
இனிநல் லெண்ணெய் தனிலருந்தே.

45. நல்லெண் ணெய்நிம் பெண்ணெய்தனில்
நளினச் சீலை தனில்தடவித்
தொல்லை செய்யும் புண்ணிலிடத்
தொலையாப் புண்ணும் தொலைந்தாறும்
கொல்ல நீரைச் சிறுத்தடைக்கும்
கொடிய கிர்ச்ச ரம்திரச்
சொல்லும் குழம்பு காடிதனில்
சுகமாய்க் கொள்ளப் பிணிபோமே.

46. போமே வயிற்றுக் கடுப்புக்குப்
போத வெள்ளாட் டுத்தயிரில்
சோமே சூலை பதினெட்டும்
தொலையுங் கருப்புக் கட்டிதனில்
ஓமே பெண்கள் உறுசூலை
ஒடும் பசுவின் தயிர்தனிலே
வேமே பித்த வெட்டைக்கு
விலாமிச் சின்வேர்க் குடிநீரே.

47. மிச்ச மறியாக் குழம்புதனை
விதியாய்த் தின்ற பெண்களுக்குப்
பச்சைச் செம்ம றிப்பாலில்
பகர்சாம் பிராணித் தயிலத்தில்

கச்சணி தனமு முண்டாகும்
　　கதித்தே பெண்ணும் ருதுவாகும்
தட்சிணா மூர்த்தி தன்குழம்பைத்
　　திரள ஒன்பது நாளருந்தே.

48. நாளா யிருந்த கிரந்தியதும்
　　நணுகித் தீர மருந்ததுகேள்
ஆளாக் கருப்புக் கட்டியதில்
　　அருந்தும் குழம்பில் கிரந்தியதும்
பாளாம் திரியால் வியாதியெல்லாம்
　　பறந்து போகு மதில்குடிக்கில்
கேளாய் எடுத்த பலரோகம்
　　குலைந்தே ஓடும் குழம்புகண்டாய்.

49.† கண்டால் வெற்றி லையில்குழம்பைக்
　　கருதிக் கொடுக்க விடந்திரும்
முண்டால் ஒருதலை வலிதனக்கு
　　முனிந்த குழம்பு கடுகளவு
நன்றாய் முலைப்பால் தனில்நசியம்
　　நாடா தொருதலை வலிபோகும்.
.............................................
　　.........................................

50. நோயாம் கண்ணோய் உள்ளோர்க்கு
　　நுணுக்கும் குழம்பு பயறளவு
மாயா முலைப்பால் தனிலுரைத்து
　　மைந்தா நெறியில் பூசிவிடப்
பேயா யிருந்த கண்ணோயில்
　　பிறந்த குத்துக் கபாலயிடி
பாயா தோடிப் போமென்று
　　பாடிச் சொல்லும் வாகடமே,

---

† சுவடியில் இப்பாடலின் ஈற்றடி எழுதப்படவில்லை. அதற்கான இடம் விடப்பட்டுள்ளது.

51. சொல்லும் மரங்க ளாகாசத்
துயர விழுந்து மூர்ச்சையதாய்
செல்லும் தண்ணீர் தனில்விழுந்து
செத்து மயங்கி விழுவோர்க்கு
வெல்லும் குழம்பு கடுகளவு
விரைந்து முலைப்பால் தனிலுரைத்து
வில்லுப் புருவ நுதலாளே
விழியி லிடவே குணமாமே.

52. குணமாம் முனிவர் சொன்னபடி
குறித்த அசாத்திய சுரந்தனக்கு
மணமாம் குழம்பு பணவெடைதான்
வகுத்த சாதிக் காய்ப்பொடியில்
உணர்வாய் அருந்த அசாத்தியசுரம்
ஒடும் குழம்பின் உறுதியினால்
தணர்வாய் கொண்முக வாதசன்னி
தீரும் தீரும் திரிப்பிடியே.

53. தீரும் குழம்புக் கினிபார்த்துத்
திறத்தைப் பேசும் வகைகேளாய்
ஊறும் முருங்கை யிலைக்குடிநீர்
உகந்து குடிக்கப் பேதிகட்டும்
பாரு மிச்சம் பழச்சாறும்
பாலும் கொடுக்கக் கணத்தில்நிற்கும்
சோறும் குழம்பும் மாற்றென்று
சொன்னார் முனிபத் தியங்காரே,

54.† காரே ஆவின் நெய்சொன்னேன்
காணி முருங்கை வாழையின்காய்[1]
பாரில் நாரத் தங்காயாம்[2]
படர்ந்த தூது வளைவற்றல்[3]
சேரும் கறிகள் இவையல்லால்[4]
செய்து பிழைகள் பண்ணாதே
வாரம் பெருத்த பொதிகைமுனி[5]
வகுத்துச் சொன்ன வாறிதுவே.[6]

---

† இப்பாடல் அச்சில் உள்ள சித்த வைத்தியத் திரட்டு என்ற நூலில் மட்டும் காணப்படுகிறது.

1 களிதான் முருங்கை வாழைப்பிஞ்சு

2 பாரில் முளைத்த நார்த்தங்காய்

3 படர்ந்து காய்க்குந் தூதுவளை

4 குறியின் யிதுவல்லால்

5 அ) சொன்னார் பொதிகை முனி

ஆ) பெருத்த பொதிகைமலை

6 வளரும் முனிவர் சொன்னாரே.

## கருத்துக் குறிப்புகள்

இனி அகத்தியர் குழம்பில் சேரும் சரக்குகள், அவற்றின் சுத்திமுறைகள், குழம்பு செய்முறை, அதன் துணை மருந்துகள், தீரும் நோய்கள், பத்தியம் பற்றி விளக்குவாம்.

சேரும் சரக்குகள்: பெருங்காயம், கடுகு, இந்துப்பு, இரசம், வெங்காரம், நாபி, மனோசிலை, ஓமம், அரிதாரம், கருஞ்சீரகம். ஒவ்வொன்றும் வகைக்கு ஒரு கழஞ்சு (5. 1 கிராம்). வாளம் 10 கழஞ்சு (51 கிராம்)

**சுத்தி முறை:**

காயம் -இதனைப் பொரித்து எடுத்துக் கொள்ளவேண்டும்.

கடுகு -தூசு தும்பு நீக்கிக் கொள்ளவேண்டும்.

இந்துப்பு -இதனைக் காடி அல்லது வெள்ளாட்டு நீரில் மூன்று நாள் ஊறப்போட்டுச் சூரியவொளியில் உலர்த்தி எடுக்கச் சுத்தியாகும்.

இரசம் -இதனைச் செங்கல் பொடியிலும், மஞ்சட் பொடியிலும், ஒவ்வொரு மணிநேரம் தனித்தனியே ஆட்டிச் சுத்த நீரால் அலம்பி, ஒருபடி குப்பை மேனிச் சாற்றிவிட்டு அடுப்பேற்றிச் சாறு சுண்டும்படி எரித்து எடுக்கச் சுத்தியாகும்.

வெங்காரம் -நீர்வற்றும்படி பொரித்துக் கொள்ள வேண்டும்.

நாபி -கோநீரில் ஊறவைத்து நிழலில் உலர்த்திக்கொள்ள வேண்டும்.

மனோசிலை -இஞ்சிச்சாறு, பழச்சாறு, பசுவின் மோர் இவைகளில் ஏதாவது ஒன்றைவிட்டு 3 மணி நேரம் நன்றாய் அரைத்து உலர்த்தி எடுத்துக்கொள்ளச் சுத்தியாகும்.

ஓமம் தூசிகள் நீக்கவேண்டும்.

அரிதாரம் கற்சுண்ணத்திலிட்டுக் கழுதை நீரிட்டுத் தாளித்து எடுக்கச் சுத்தியாகும்.

கருஞ்சீரகம் -தூசு, தும்புகளின்றி எடுத்துக் கொள்ளவேண்டும்.

நேர்வாளம் -பசுவின் சாணப்பால், பசுவின் நீர், பழச்சாறு ஆகிய மூன்றிலும் நேர்வாளத்தை ஒரு துணியில் முடிந்து போட்டுத் தனித்தனியே வேகவைத்தெடுத்து ஓட்டையும் தோலையும், உள்ளிலையையும் நீக்கி, பசுவின் நெய்விட்டு வறுத்தெடுக்கச் சுத்தியாகும். 25·5 கிராம் நேர்வாளத்தை வறுக்காமல் எடுத்துக்கொள்ள வேண்டும்.

**குழம்பு செய்முறை:**

பெருங்காயம், கடுகு, நாபி, ஓமம், கருஞ்சீரகம் ஆகிய இவற்றைத் தனித்தனியாக உரலிலிட்டுப் பொடித்துக் கொள்ள வேண்டும். பின் ஒவ்வொன்றாகக் கல்வத்திலிட்டு, நேர்வாளம் தவிர மற்றச் சரக்குகளையும் சேர்த்து அரைக்கவேண்டும். அதன் பின் நேர்வாளப் பருப்பினை ஒவ்வொன்றாகக் கூட்டி மெழுகுபதம் வரும்வரை அரைத்து வழித்தெடுத்துக் கொம்புச் சிமிழில் வைத்துக் கொள்ளவேண்டும்.

**அரைக்கும்போது கடைப்பிடிக்க வேண்டியவை:**

மருந்து அரைப்பவர்கட்கு உடம்பில் எரிச்சல் உண்டாகும். இதனைத் தவிர்க்க மோரும் சோறும் உண்டபின் அரைக்க வேண்டும்.

**அளவு:**

488.மி கிராம் அகத்தியர் குழம்பை உரிய அளவு துணை மருந்துடன் கொள்ளவேண்டும் எனக் கூறப்படுகிறது. இது தற்கால மாந்தருக்கு மிகுதியான அளவாகும். எனவே இதில் பாதியளவு காலை ஒரு வேளை மட்டும் வெறும் வயிற்றில் வழங்கலாம்.

கண்ணில் இட - சிறுகடுகளவு.

**எச்சரிக்கை:**

தக்க மருத்துவரின் அறிவுரையும் கண்காணிப்பும் இல்லாமல் இதனைப் பயன்படுத்தலாகாது.

| | துணைமருந்து | தீரும் நோய்கள் |
|---|---|---|
| 1. | சுக்குத் தூள் | சுரம் |
| 2. | கடுக்காய்த் தூள் | இருமல் |
| 3. | சுக்கு, மிளகுத் தூள் | குளிர் சுரங்கள் |
| 4. | பசுநெய், பால் | இரத்த மூலம் |
| 5. | மிளகுத் தூள், வெள் வெங்காயம் | பாண்டு, மகோதரம், பெரு வயிறு, நீராமை, சோகை |
| 6. | தேன், இஞ்சிச் சாறு | சன்னி |
| 7. | நொச்சிச் சாறு | சூசிகா வலி, வாதசுரம் |
| 8. | கஞ்சாச் சாறு | காசம், பீனிசங்கள் |
| 9. | சுக்கு, மிளகு | வாதசூலை |
| 10. | தாழை விழுது | நீர்க்கட்டு, நீர்க்கல்லடைப்பு |
| 11. | சங்கங்குப்பிச் சாறு | கிரந்தி, கரப்பான் |
| 12. | வெள்ளுள்ளி, கழற்சியிலைக் குடிநீர் | 13 வகை சன்னி |
| 13. | அரசின் கொழுந்தை ஆவின் பாலில் அரைத்து | பெண்களுக்குக் கர்ப்பம் உண்டாகும். ஆண்களுக்கு ஆண்மை உண்டாகும். |
| 14. | நாவல் பட்டையை ஆட்டின் பால் விட்டரைத்துச் சீரகப்பொடி சேர்த்து | சூதக வலி, சூதக வாய்வு |
| 15. | நொச்சிச் சாறு, சாரணை வேர்த் தூள், மிளகுத் தூள் | சூசிக வாயு, திரட்சி, வலி |
| 16. | உள்ளி, முருங்கைப்பட்டை, புங்கு, எருக்கம் வேர், திருகு கள்ளி, இஞ்சிச் சுரசம் | பிறவிச் சூதகக் கோளாறுகள் |
| 17. | இலவங்கப் பத்திரி, கிராம்பு, அதிமதுரம், தாளிசப் பத்திரி, வெண்ணெய் | நெஞ்சு வலி |

| | துணைமருந்து | தீரும் நோய்கள் |
|---|---|---|
| 18. | தாளியிலை, அவுரி, வெண்ணெய் | விரியன் விஷம் |
| 19. | நாவல் கொழுந்து, மிளகு, வெற்றிலை | நாகக்கடி விஷம் |
| 20. | அகத்தியிலை, துளசியிலை | தேள்கடி விஷம் |
| 21. | வெல்லம், புகையூறல், மிளகு, பேய்ப்பீர்க்கு, குப்பைமேனிச் சாறு | வழலை விஷம் |
| 22. | பழையபுளி, வெல்லம், சித்திர மூலம், குப்பைமேனிச் சாறு | நஞ்சுக்கடியினால் உண்டான வலி. |
| 23. | மிளகு, பொரித்த வெங்காரம், பால் அல்லது நெய் | விஷபாகத்தில் உண்டான வீக்கம் |
| 24. | நொச்சிச் சாறு, சுக்கு, மிளகு, திப்பிலி | விஷபாகத்தில் உண்டான வீக்கம் |
| 25. | சுக்குக் குடிநீர் | பேய் பிடித்தல், வாதசுரம் |
| 26. | கடுக்காய்க் குடிநீர் | பித்த சுரம் |
| 27. | திப்பிலி, கிராம்பு, வெற்பேந்தி, நாபிக் குடிநீர் | சேத்தும சுரம் |
| 28. | இஞ்சிச் சுரசம், வெள்ளுள்ளித் தைலம் | 13 வகை சன்னி |
| 29. | இளநீர், வெள்ளரிக்காய், காடி, திப்பிலிக் குடிநீர் | நீரடைப்பு |
| 30. | காடி | வாந்தி, கிரிச்சரம் |
| 31. | இஞ்சிச் சுரசம் | மூலவாயு, வாதம், எண்வகைக் குன்மம் |
| 32. | பசுவின் பால் | மூலத்தில் சீதம் விழுதல், பித்தம், சூதகக்கட்டு, கர்ப்ப விப்புருதி |
| 33. | பசுவின் நெய் | மூலத்தில் இருந்து இரத்தம் விழல் |

| துணைமருந்து | | தீரும் நோய்கள் |
|---|---|---|
| 34. | வெள்ளாட்டுப் பால் | கர்ப்ப விப்புருதி |
| 35. | அகத்திச் சாறு | மகோதரம் |
| 36. | ஆமணக்கெண்ணெய் | வாயு, திரட்சி |
| 37. | இஞ்சிச் சாறு | அண்டவாதத்தில் உண்டாகும் சுரம், வாயுவினால் வந்தசுரம் |
| 38, | தேங்காய்ப் பால் | மூலவாதம் |
| 39. | கருப்புக் கட்டி | மூலவாயுவினால் வந்த சுரம், 18 வகைச் சூலை, கிரந்தி |
| 40. | கடுக்காய், திப்பிலி | ஐயம் |
| 41. | பஞ்சமூலக் குடிநீர் (கண்டு பாரங்கி, சித்திரமூலம், சுக்கு, செவ்வியம், பேரரத்தை என்பன பஞ்ச மூலமாகும்) | 13 வகைச் சன்னி |
| 42. | வெல்லம் | தாப சுரம், வாத சுரம் |
| 43. | கொத்துமல்லிக் குடிநீர் | பித்த சுரம் |
| 44. | திப்பிலிக் குடிநீர் | ஐய சுரம் |
| 45. | இஞ்சிச் சுரசம் அகத்தியிலைச் சாறு | குளிர் |
| 46. | எலுமிச்சம்பழச் சாறு | காமாலை |
| 47. | நல்லெண்ணெய் | ஆறாப் புண்கள் |
| 48. | வெள்ளாட்டுத் தயிர் | வயிற்றுக் கடுப்பு |
| 49. | பசுவின் தயிர் | பெண்களுக்குண்டாகும் சூலை |
| 50. | விளாமிச்சைவேர்க் குடிநீர் | பித்த வெட்டை |
| 51. | செம்மறியாட்டுப் பால், சாம்பிராணித் தைலம் | கொங்கைகளுண்டாகி ருதுஉண்டாகும் (9 நாள் சாப்பிடவேண்டும்) |
| 52. | வெற்றிலை | விஷம் |
| 53. | சாதிக்காய்ப் பொடி | அசாத்திய சுரம், முகவாதம், சன்னி |

**வெளிப்பிரயோகம்:**

| | |
|---|---|
| வேப்பெண்ணெயில் கண்ணிலிட | சுகசன்னி |
| உமிழ்நீர் சேர்த்துப் பூச | பரு, பிளவை, தொடைவாழை, ஆறாப் புண்கள், நரம்புச் சிலந்தி, நகிற்குத்து, நகிற்புண், விடம் |
| திரிப் புகை | கபாலவலி, தலைவாதம், பேய் பிடித்த நிலை |
| சுக்கு நீரில் கண்ணிலிட | பேய் பிடித்த நிலை |
| தாய்ப் பாலில் நசியமிட | ஒற்றைத் தலைவலி |
| தாய்ப் பாலில் கண்ணி லிட | கண்ணோய்கள், மரத்திலிருந்தோ நீரிலோ விழுந்த மயக்கம் |
| நல்லெண்ணெய், வேப் பெண்ணெய் | ஆறாப்புண்கள் |

## இம்மருந்தால் ஏற்படும் பின் விளைவுகளும் தடுப்பு முறைகளும்

| | |
|---|---|
| 1. மருந்தை அரைக்கும் போது உடல் எரிச்சல் உண்டாகாமலிருக்க | மோரும், சோறும் உண்ட பின்பே அரைக்க வேண்டும். |
| 2. கண்ணிலிட வீக்கம் உண் டானால் | கற்றாழஞ் சோறு, தயிர், சந்தனம் வைத்துக் கட்ட வேண்டும். |
| 3. பேதி அதிகமானால் | 1. சுட்ட வசம்பைக் குடிநீர் செய்து பாக்களவு வெண்ணெய் சேர்த்துக் கொடுக்க வேண்டும். 2. மோர், பழச்சாறு 3. வசம்பு, முருங்கை, ஈர்க்குக் குடிநீர் 4. பால், எலுமிச்சம் பழச்சாறு கலந்து வடிகட்டிக் கொடுக்க வேண்டும். |

4. வாந்தி அதிகமானால் — சீரகக் குடிநீரில் சர்க்கரை சேர்த்துக் கொடுக்க வேண்டும்.

**பத்தியம்:**

ஆவின் நெய், பொன்னாங்கண்ணி, முருங்கை, வாழைக்காய், நாரத்தங்காய், தூதுவளை வற்றல் இவைகளை உண்ணலாம்.

பேதி அதிகமாயிருக்கும் போது சோறும், குழம்பும் உண்ணக் கூடாது.

## நோய்க்குரிய துணை மருந்துகள்
(அகர நிரலில்)

| தீரும் நோய் | துணை மருந்துகள் |
|---|---|
| அசாத்திய சுரம் | சாதிக்காய்ப்பொடி |
| அண்டவாதத்தில் உண்டாகும் சுரம் | இஞ்சிச் சாறு |
| ஆண்மைக் குறைவு | அரசின் கொழுந்தை ஆவின் பாலில் அரைத்து |
| ஆறாப் புண்கள் | நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், உமிழ்நீர் (வெளிப் பிரயோகம்) |
| இரத்த மூலம் | நெய், பால் |
| இருமல் | கடுக்காய்த் தூள் |
| எண்வகைக் குன்மம் | இஞ்சிச் சுரசம் |
| ஐய சுரம் | திப்பிலிக் குடிநீர் |
| ஐயம் | கடுக்காய், திப்பிலி |
| ஒற்றைத் தலைவலி | தாய்ப்பாலில் நசியமிட (வெளிப் பிரயோகம்) |
| கபால வலி | திரிப்புகை (வெளிப் பிரயோகம்) |
| கர்ப்ப விப்புருதி | வெள்ளாட்டுப் பால் |
| கரப்பான் | சங்கங்குப்பிச் சாறு |
| காசம் | கஞ்சாச் சாறு |
| காமாலை | எலுமிச்சம்பழச் சாறு |

| | |
|---|---|
| கிரந்தி | கருப்புக் கட்டி, சங்கங்குப்பிச் சாறு |
| கிரிச்சரம் | காடி |
| குளிர் | இஞ்சிச் சுரசம், அகத்தியிலைச் சாறு |
| குளிர் சுரங்கள் | சுக்கு, மிளகுத் தூள் |
| கொங்கைகள் வளராமையும், குது உண்டாகாமையும் | செம்மறியாட்டுப் பால், சாம்பிராணித் தைலம் |
| சன்னி | தேன், இஞ்சிச் சாறு, சாதிக்காய்ப் பொடி |
| சுகசன்னி | வேப்பெண்ணெயில் கண்ணிலிட (வெளிப் பிரயோகம்) |
| சுரம் | சுக்குத் தூள் |
| சூசிகவாயு | நொச்சிச் சாறு, சாரணைவேர்த் தூள், மிளகுத் தூள் |
| சூசிகா வலி | நொச்சிச் சாறு |
| சூதக வலி | நாவல் பட்டையை ஆட்டின்பால் விட்டு அரைத்துச் சீரகப்பொடி சேர்த்து |
| சூதக வாய்வு | நாவல் பட்டையை ஆட்டின்பால் விட்டரைத்துச் சீரகப்பொடி சேர்த்து |
| சேத்தும சுரம் | திப்பிலி, கிராம்பு, வெற்பேந்தி, நாபிக் குடிநீர் |
| தலைவாதம் | திரிப் புகை (வெளிப் பிரயோகம்) |
| தாப சுரம் | வெல்லம் |
| திரட்சி | ஆமணக்கெண்ணெய், நொச்சிச் சாறு, சாரணைவேர்த் தூள், மிளகுத் தூள் |
| தேள்கடி விஷம் | அகத்தியிலை, துளசியிலை |
| தொடை வாழை | உமிழ்நீரில் (வெளிப் பிரயோகம்) |
| நகிற்குத்து | உமிழ்நீரில் (வெளிப் பிரயோகம்) |
| நகிற்புண் | உமிழ்நீரில் (வெளிப் பிரயோகம்) |
| நஞ்சுக்கடி வலி | பழைய புளி, வெல்லம், சித்திர மூலம், குப்பைமேனிச் சாறு |

| | |
|---|---|
| நரம்புச் சிலந்தி | உமிழ்நீரில் (வெளிப் பிரயோகம்) |
| நாகக்கடி விஷம் | நாவல் கொழுந்து, மிளகு, வெற்றிலை |
| நீர்க்கட்டு | தாழை விழுது, மிளகு, பொரித்த வெங்காரம், பால் அல்லது நெய் |
| நீர்க்கல்லடைப்பு | தாழை விழுது |
| நீரடைப்பு | இளநீர், வெள்ளரிக்காய், காடி, திப்பிலிக் குடிநீர் |
| நீராமை | மிளகுத் தூள், வெள்வெங்காயம் |
| நெஞ்சுவலி | இலவங்கப் பத்திரி, கிராம்பு, அதிமதுரம், தாளிசப் பத்திரி, வெண்ணெய் |
| பதின்மூன்று வகைச் சன்னி | இஞ்சிச் சுரசம், வெள்ளுள்ளித் தைலம், பஞ்சமூலக் குடிநீர், வெள்ளுள்ளி, கழற்சியிலை |
| பதினெட்டு வகைச் சூலை | கருப்புக்கட்டி |
| பரு | உமிழ்நீரில் (வெளிப் பிரயோகம்) |
| பாண்டு | மிளகுத்தூள், வெள்வெங்காயம் |
| பித்த சுரம் | கடுக்காய்க் குடிநீர், கொத்தமல்லிக் குடிநீர் |
| பித்தம் | பசுவின் பால் |
| பித்த வெட்டை | விளாமிச்சைவேர்க் குடிநீர் |
| பிளவை | உமிழ்நீரில் (வெளிப் பிரயோகம்) |
| பிறவிச் சூதகக் கோளாறுகள் | உள்ளி, முருங்கைப் பட்டை, புங்கு, எருக்கம் வேர், திருகு கள்ளி, இஞ்சிச் சுரசம் |
| பீனிசங்கள் | கஞ்சாச் சாறு |
| பெண்களுக்குக் கர்ப்பம் உண்டாக | அரசின் கொழுந்தை ஆவின் பாலில் அரைத்து |
| பெண்களுக்கு உண்டாகும் சூலை | பசுவின் தயிர் |
| பெருவயிறு | மிளகுத் தூள், வெள்வெங்காயம் |

| | |
|---|---|
| பேய்பிடித்தல் | சுக்குக் குடிநீர் (உள்ளுக்கு) சுக்கு நீரில் கண்ணிலிட (வெளிப் பிரயோகம்) |
| மகோதரம் | அகத்திச் சாறு, மிளகுத் தூள், வெள் வெங்காயம் |
| மரத்திலிருந்தோ, நீரிலோ விழுந்த மயக்கம் | தாய்ப்பாலில் கண்ணிலிட (வெளிப் பிரயோகம்) |
| முக வாதம் | சாதிக்காய்ப் பொடி |
| மூலத்தில் இரத்தம் விழல் | பசுவின் நெய் |
| மூலத்தில் சீதம் விழுதல் | பசுவின் பால் |
| மூல வாதம் | தேங்காய்ப் பால் |
| மூல வாயு | இஞ்சிச் சுரசம் |
| மூலவாயுவினால் உண்டாகும் சுரம் | கருப்புக் கட்டி |
| வயிற்றுக் கடுப்பு | வெள்ளாட்டுத் தயிர் |
| வலி | நொச்சிச் சாறு, சாரணைவேர்த் தூள், மிளகுத் தூள் |
| வழலை விஷம் | வெல்லம் புகையூறல், மிளகு, பேய்ப் பீர்க்கு, குப்பைமேனிச் சாறு |
| வாத சுரம் | சுக்குக் குடிநீர், நொச்சிச் சாறு, வெல்லம் |
| வாத சூலை | சுக்கு, மிளகு |
| வாதம் | இஞ்சிச் சுரசம் |
| வாந்தி | காடி |
| வாயு | ஆமணக்கெண்ணெய் |
| வாயுவினால் வந்த சுரம் | இஞ்சிச் சாறு |
| விரியன் விஷம் | தாளியிலை, அவுரி, வெண்ணெய் |
| விஷபாகத்தில் உண்டான விக்கம் | நொச்சிச் சாறு, சுக்கு, மிளகு, திப்பிலி |
| விஷம் | வெற்றிலை (உள்ளுக்கு) உமிழ்நீரில் (வெளிப் பிரயோகம்) |

# அகத்தியர் குழம்பு

## மருந்துச் சரக்குகள் மற்றும்
## துணை மருந்துகளின் மருத்துவப் பயன்கள்.

(பிற நூல்கள்)

## அகத்தியர் குழம்பில் சேரும் மருந்துச் சரக்குகள் துணை மருந்திற்குப் பயன்படும் மருந்துப் பொருட்கள் ஆகியவற்றின் மருத்துவப் பயன்கள்

அகத்தி:

''மருந்திடுதல் போகுங்காண் வன்கிரந்தி வாய்வாம்
திருந்த அசனம் செரிக்கும்-வருந்தச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளும்
அகத்தியிலை தின்னு மவர்க்கு''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 2

அதிமதுரம்:

''கத்தியரி முப்பிணியால் வருபுண் தாகங்
கண்ணோய்உடன் மாதம்விக்கல்
வலிவெண் குட்டம்
பித்தமெலும் புருக்கிகிரிச் சரம்ஆ வர்த்த
பித்தமத மூர்ச்சைவிட பாகம் வெப்பந்
தத்திவரு வாதசோ ணிதங்கா மாலை
சருவவிடங் காமியநோய் தாது நட்டங்
குத்திருமல் ஆசியங்கும் இதழ்நோய் இந்து
குயப்புணும்போம் மதூகமெனக் கூறுங்காலே''

''தித்திக்கு மதிமதுரக் கணத்தையெடுத் துரைக்கில்
சிரமயக்கஞ் சுரதாகந் திரிதோ டங்கள்
பித்தஞ்சத் திக்குமிது குணமா மதுரதீபனமாந்
தாதுவுட் டிணமுந் தவிர்க்கும்விழிக் கிதமாம்
புத்திக்கு வித்தாகுஞ் சந்தாபந் தீர்க்கும்
புகைந்தெடுக்குஞ் சேட்டுமத்தைப்
பித்தரோ கத்தை
அத்திபற் றினமேகந் தன்னைவா தத்தினை
யறுத்திடும்வச் சிரமென்பா
ரதிமதுரந் தனையே''

''அதிமதுரம் பேரிந்துக் கானகுணங் கேளீர்
கொதிமருவாப் பித்தங் குறுகுமே-துதிமருவாய்
நீரதுவு முண்டாம் நிலையாத தாபம்போம்
பாரறியச் சொன்னோம் பகர்ந்து''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 9

அரிதாரம்:

''தாளகத்தின் பேருரைக்கத் தாலுகவுள் நோய்குஷ்டம்
நீளக் குளிர்காய்ச்சல் நீடுகபம் - நாளகங்கொள்
துட்டப் பறங்கிப்புண் சூழமுகல் மண்டைநோய்
கிட்டப் படுமோ கிளத்து.

குணபாடம் (தாதுசீவ வகுப்பு) பக் 188

அவுரி:

''எல்லா விடங்களுக்கும் ஏற்ற முறிப்பாகும்
பொல்லாச்சுரமூர்ச்சை பொங்குவெட்டை-நில்லாப்
பவுரிதருங் குன்மமுதல் பன்னோ யொழியும்
அவுரிதரும் வேருக் கறி.

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 34

ஆமணக்கெண்ணெய்:

''ஏரண் டத்துநெய் யென்ப துடற்கொடு
சிரண் டத்தனி செய்திடு நிசமே''

''ஆமணக்கு நெய்யால் நலமுண்டாம் யாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே - வாய்மணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறும்
உள்ளில்வரு குன்மம்போ மோது''

அம்பொனிற மும்விந்து மாங்குடலி னேற்றமறும்
ஐம்பொறிச் சூடெரிவு மாறுங்காண் - அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய்! நலஞ்செறிந்த
ஆமணக்கு நெய்யை அருந்து.

''ஆமணக் கெண்ணெய் தன்னை
யணிநில மறியக் கேண்மின்
பூமணச் சந்து தோறும்
பொருந்திய வாதம் போக்கும்
திமந்தந் தானும் போக்குந்
திகழ்வுடன் விரைவு முண்டாம்
தீமனக் குடலில் வாதஞ்
சேர்குட லேற்றம் போமே.

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 54

இந்துப்பு:

''அட்டகுன்ம மந்த மசிர்க்கரஞ்சூர் சீதபித்தந்
துட்டவையம் நாடிப்புண் டோடங்கள்-கெட்டமலக்
கட்டுவிட விந்தையக் காமியநோய் வன்கரப்பான்
விட்டுவிட விந்துப்பை விள்.

''சென்னிகண்ணா பற்றூர் செவிகவுள்கண் டம்பகநோய்
சன்னியா சங்காசந் தாகமிரைப் - புண்ணிரத்த
மூலஞ் சிலந்திநளி மூடிகநஞ் சூதைவலி
சூலஞ் சிதையுமிந்துப்பாற் சொல்

குணபாடம் (தாதுசீவ வகுப்பு) பக் 213

இரசம்:

விழிநோய் கிரந்திகுன்மம் மெய்ச்சூலை புண்குட்
டழிகாலில் விந்துவினால் அத்தை-வழியாய்
புரியுவிதி யாதும் புரியினோ யெல்லாம்
இரியுவிதி யாது மிலை.''

குணபாடம் (தாதுசீவ வகுப்பு) பக் 138

இலவங்கப் பத்திரி:

''மேகசுரம் சீதசுரம் வெட்டைசுவா சங்காசம்
தாகபித்தம் வாந்திசர் வாசியநோய்-மேகத்தின்
கட்டியொடு தாதுநட்டங் கைப்புருசி போக்கிவிடும்
இட்டஇல வங்கத் திலை.

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 86

ஓமம்:

ஆமம்போம் வாயுவலி அக்கினி மந்தமறும்
ஓமமத னைக்கண்டா லோடுமே-சேமந்தான்
வயத்து மலம்போக்கும் வன்பிணியைத் தீர்க்கும்
செகத்தில் மனிதருக்குச் செப்பு - (இரசவர்க்கம்)

சிதசுரங் காசஞ் செரியாமந் தம்பொருமல்
பேதியிரைச் சல்கடுப்பு ரோமம்-ஓதிருமல்
பல்லொடுபல் மூலம் பகமிவைநோ யென்செயுமோர்
சொல்லொடுபோம் ஓமமெனச் சொல்

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 128

எருக்கம் வேர்:

''வெள்ளெருக் கின்புற வேருமிப் படிசெய்து
கொள்ளவே விருச்சிகக் கூட்டமாந் தேட்குல
மனைத்தினுக் குங்கொடுத் தருளலா மூண்மையே''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 114

எலுமிச்சம்பழச்சாறு:

''தாகம் குநகநோய் தாழாச் சிலிபதநோய்
வேகங்கொள் உன்மாதம் விறுபித்தம்-
மாகண்ணோய்
கன்னனோய் வாந்தியும்போங் கட்டுவா
தித்தொழிலில்
மன்னெலுமிச் சங்கனியை வாழ்த்து''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 117

2. கடுகு:

''நேரான கடுகுக்குச் சூலைபோம்'' (பதார்த்த குணம்)

''இடிகாச நாசிக்கு ரீளைகபம் பித்தங்
கடிவாத சிதங் கடுப்போ-டுடலிற்
படுகோட்டு நோயென்னும் பங்கிவைக ளைப்புண்
கடுகோட்டு மேன்மருந்து காண்.

''மந்தமயக் கம்வாதம் வாய்நீர்ச் சுழற்றலறு
முந்து சுகப்பிரச வங்களுண்டா-மிந்துநுதன்
மானே கிராணிகுன்ம மாறுமுத் தோடமும்போம்
தானே கடுகிற்குத் தான்

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 146

கடுக்காய்:

''தாடை கழுத்தக்கி தாலு குறியிவிடப்
பீடை சிலிபதமுற் பேதிமுடம்-ஆடையெட்டாத்
தூலமிடி புண்வாத சோணிகா மாலையிரண்
டாலமிடி போம்வரிக்கா யால்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 154

கழற்சியிலை:

''விரைவாதஞ் சூலையறும் வெட்டையன லேகும்
நிரைசேர்ந்த குன்மம் நிலையா - துரைசேர்
அழற்சி விலகும் அருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 190

கருஞ்சீரகம்:

''கருஞ்சீ ரகத்தான் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சிராய்ப் பீநிசமு மாற்றும் - அருந்தினால்
காய்ச்சல் தலைவலியுங் கண்வலியும் போமுலகில்
வாய்ச்ச மருந்தெனவே வை''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 347

கற்றாழை:

''பொல்லாமே கங்கபம்பு மூச்சூலை குட்டரசம்
அல்லார்மத் தம்பகந்த ரங்குன்மம்-எல்லாம்விட்
டேகு மரிக்கு மெரிச்சற் கிரிச்சரமு
மாகு மரிக்கு மருண்டு''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 205

கிராம்பு:

''பித்த மயக்கமறும் பேதியொடு வாந்தியும்போம்
சுத்தவிரத் தக்கடுப்புந் தோன்றுமோ-மெத்த
இலவங்கங் கொண்டவருக் கேற்றசுக மாகும்
மலமங்கே கட்டுமென வாழ்த்து''

''சுக்கிலநட் டங்காண சூர்வியங்க லாஞ்சனந்தாட்
சிக்கல்விடாச் சர்வா சியப்பிணியு-மக்கிக்குட்
டங்கப்பூ வோடு தரிபடருந் தோன்றிலில
வங்கப்பூ வோடுரைத்து வா''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 83

குப்பைமேனி:

''தந்தமூ லப்பிணித் தந்திடுபுண் சர்வவிடம்
உந்துகுன்மம் வாதம் உதிரமூ-லந்தினவு
சூலஞ்சு வாசம் தொடர்பீனி சங்கபம்போம்
ஞாலங்கொள் மேனியத னால்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 270

கொத்துமல்லி:

கொத்துமல்லி வெப்பம் குளிர்காய்ச்சல் பித்தமந்தம்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநட்டம்-கத்தியெழும்
வாத விகாரமடா வன்கர்த் தபிவிரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 293

சங்கங்குப்பி:

''கரப்பான் கிரந்தி கருங்குட்ட ரோகம்
உரப்பான மேகம் ஒழியுங்-கருவாம்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளு மேகும்
அருஞ்சங்கங் குப்பிக் கறி''

''வெட்டை சொறிசிரங்கு வீறி வருஞ்சூலை
துட்டவா தங்கபந்து ணுக்கிருமல் - கெட்டவிடம்
அங்கங்கொள் பூச்சியிவை யாவும்போம்
பித்தமுறுஞ்
சங்கங்குப் பிக்கெனவே சாற்று''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 71

சந்தனம்:

''கோதில் சந்தனஞ் சீதோஷ்ணங் கொண்டிருக்கும்
வாதபித்தம் ஐயம் மனப்பிரமை-ஒதுசுரம்
மேகம் தனித்தாகம் வெப்புசொறி யும்போக்கும்
ஆகந் தனக்குறுதி யாம்''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 321

சருக்கரை:

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடல் வாந்திபித்தம்
போக்கும் - அருந்தருசி
நீக்கு மதிகபத்தை நீற்று மகிழ்ச்சியுண்
டாக்கு நறுஞ்சர்க்க ரை
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 179

சாதிக்காய்:

''தாதுநட்டம் பேதி சருவாசி யஞ்சிரநோய்
ஓதுசுவா சங்காசம் உட்கிரணி - வேதோ
டிலக்காய் வரும்பிணிபோம் ஏற்றமயல் பித்தங்
குலக்கா யருந்துவர்க்குக் கூறு.
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 324

சாரணை வேர்:

''சீதஞ் சலதோடந் தேமல் தழும்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வன்மேகம் - ஒதரிய
காசமுதல் நோயெல்லாங் கான்சா
ரடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில்''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 317

சித்திரமூலம் (கொடிவேலி);

''கட்டிவிர ணங்கிரந்தி கால்கள் அரையாப்புக்
கட்டிசூ லைவிக்கங் காழ்மூலம் — முட்டிரத்தக்
கட்டுநீ ரேற்றங் கனத்த பெருவயிறும்
அட்டுங் கொடிவேலி யாம்''

''கட்டியே சூலைக் கட்டு கருதிடு குறிப்புண் கிரந்தி
ஒட்டுமே கரணத் தோடு முறுமரை யாப்பு மன்றி
விட்டிடா நெறிச்சு ரம்பின் வியன்விட மச்சு ரந்தான்
பொட்டெனப் பறந்து போகும் புகழ்கொடி
வேலி கண்டால்

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 286

சீரகம்:

''பித்தமெனு மந்திரியைப் பின்னப் படுத்தியவன்
சத்துருவை யுந்துரந்து சாதித்து — மத்தனெனும்
ராசனையு மீவென்று நண்பைப் பலப்படுத்திப்
போசனகு டாரிசெயும் போர்''

''வாந்தி யருசிகுன்மம் வாய்நோய் பிலீகமிரைப்
பேந்திருமல் கல்லடைப்பி லாஞ்சனமுட் - சேர்ந்த
ஆசனகு டாரியெனும் அந்தக் கிரகணியும் [கம்மல்
போசனகு டாரியுண்ணப் போம்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 344

சுக்கு:

''சூலைமந்தம் நெஞ்செரிப்பு தோடமேப் பமழலை
மூலம் இரைப்பிருமல் மூக்குநீர் — வாலகப
தோடமதி சாரந் தொடர்வாத குன்மநீர்த்
தோடஆ மம்போக்குஞ் சுக்கு''

''வாத பிணிவயி றூதற் செவிவாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழிநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகமிடி கபமார்

சீதச் சுரம்விரி பேதிச் சுரநோய்
　　தெறிபடு மெனமொழி குவர்புவி தனிலே
ஈதுக் குதவுமி தீதுக் குதவா
　　தெனும்விதி யிலைநவ சுறுகுண முனவே''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 352

தயிர்;

''தயிருணப் பயித்திய சஞ்சல மகற்றிமெய்
யெயிலென வின்பமு மெய்திடப் புரியும்''
குணபாடம் (தாதுசீவ வகுப்பு) பக். 404

தாழைவிழுது:

''.............................................
.................................................
சுக்கிலத்தை நெய்யைத் துலங்குவிக்குஞ் சோபையெனும்
அக்குலத்தை நீக்கும் அறி''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 379

தாளிசப்பத்திரி:

''நாசி களப்பிணிகள் நாட்பட்ட காசஞ்சு
வாசம் அருசி வமனங்கால் — வீசிவரு
மேகமந்தம் அத்திசுரம் விட்டேகுந் தாளிசத்தால்
ஆகுஞ் சுகப்பிரச வம்''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 380

திப்பிலி:

''இருமல் குன்மம் இரைப்பு கயப்பிணி
　　ஈளை பாண்டு சன்னியாசம் அரோசகம்
பொருமல் ஊதை சிரப்பிணி மூர்ச்சைநோய்
　　பூரிக் குஞ்சல தோடம் பீலிகமும்
வரும லப்பெருக் கோடு மகோதரம்
　　வாதம் ஆதிமுத் தோடஞ் சுரங்குளிர்
பெருமா லைப்புரி மேகப் பிடகமும்
　　பேருந் திப்பிலிப் பேரங் குரைக்குவே''

''ஆசனநோய் தொண்டைநோய் ஆவரண பித்தமுதல்
நாசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய் - வீசிடுவி
யங்கலாஞ்ச னஞ்சிதையும் அம்பாய் அழிவிந்தும்
பொங்கலாஞ்ச நங்கையர்கோட் போல்''

''கட்டியெதிர் நின்று கடுநோயெல் லாம்பணியும்
திட்டி வினையகலும் தேகமெத்த - புட்டியாம்
மாமனுக்கு மாமனென மற்றவர்க்கு மற்றவனாங்
காமனெனுந் திப்பிலிக்கும் கை''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 384

திருகுகள்ளி:

''வாத முடக்ககலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீதமொழி யுங்கிருமி சேருமோ - மாதே
பருகுபக்க நோயுடனே பாழுங்கரப்பான் றிருந்
திருகுகள்ளிப் பாலாற் றெளி''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 197

''நரம்புச் சிலந்தி நளிர்வாத சன்னி
யுரம்பெரிய வாதமிவை யோடும் - பெரும்புவியிற்
கள்ளிமரப் பட்டையினால் ..........
.........................................

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 197

துளசியிலை:

''மன்னனுக்குச் சிரளித்து மற்றவரைத் தாழவைத்துப்
பின்ன மிலாதுடலைப் பேணியே - மன்னுநிலைப்
பேரணியப் பண்ணும் பிணிக்குப் பிணியாகும்
தாரணியில் மாலலங் கல்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 396

தேங்காய்ப்பால்:

''வாதமாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாது விருத்தியாந் தாழ்குழலே - போதநல்ல
அன்ன மிறங்கு மதியுருசி யுண்டாகுந்
தென்னங்காய்ப் பாலாற் றெளி''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 403

தேன்:

''அனலா லெழுந்த வருசிசர்த்தி தாழும்
புனலாருங் கோழையது பொங்குங் - கனலாருந்
தேன்பாகுக் கென்றுமதைச் சேரோ டதியதனால்
கான்பாவ நோய்க்கூட்டங் காண்''

(ஏடு)

நல்லெண்ணெய்:

''புத்திநய னக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புளகஞ்
சத்துவங் காந்தி தனியிளமை - மெத்தவுண்டாங்
கண்ணோய் செவிநோய் கபாலவழல் காசநோய்
புண்ணோய்போ மெண்ணெய்யாற் போற்று.

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 120

நாபி:

''வாதவலி மந்தமறல் மாறாக் கபப்பிணிகள்
ஒதுகுட்ட குன்மந்தேள் ஓடுங்காண் - காதலர்தம்
புத்தியோ டாருயிரும் பூவும் வனைகுழலே!
சுத்திசெய்த நாவியின்பேர் சொல்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 421

நாவற்பட்டை:

''ஆசியநோய் காசம் அசிர்க்கரஞ்சு வாசவினை
கேசமுறு பால கிரகநோய் - பேசரிய
மாவியங்க லாஞ்சனமிவ் வன்பிணியெ லாமேகும்
நாவலுறு பட்டையத னால்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 424

நேர்வாளம்:

''எந்த வியாதி யினங்களையுஞ் சாடிமல
பந்த வினையைப் பரிகரித்து - வந்தவெப்பைப்
பாபியென மாட்டுதலால் பாடாண வெம்மையினும்
சோபிமகா சோபியென்று சொல்''

''ஓதி லுதரத் துறுமலம்பன் னோய்விலகும்
பேதி மருந்திற் பெரிதாகும் - வாதமறுங்
கூர்வாளை யொத்தவிழிக் கொம்பனையே
பண்டிதர்சொல்
நேர்வாளக் கொட்டைதனை நீ''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 461

நொச்சி:

''நோயா கலியை நொடிக்கு ளருந்தவெம்மை
யோயாம னாளு முயர்த்துதலுக் - காய
வந்தமுதல் நண்பாகி வாதத்தை யேயுறவாற்
சிந்துவா ரங்கனலுந் தீ''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 463

பழையபுளி:

''தீதில் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோடம்
வாதமொடு சூலைகபம் மாறுங்காண் - ஒதுசுரஞ்
சர்த்தியென்ற தோடமிவை சாந்தமாங்
கண்ணோய்போம்
பித்தமென்ற பேரொழியும் பேசு''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 512

புகையிலை:

''மருந்தை முறித்துவிடும் வாய்வறளச் செய்யும்
திருந்து பலவினஞ் சேர்க்கும் - பொருந்துபித்தம்
உண்டாக்கும் விந்தழிக்கும் ஓது புகையிலையைக்
கண்பார்க்கும் ஆகாது காண்''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக், 506

புங்கம்வேர்:

''வாதக் கடுப்பு மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்மம் ரத்தத்தால் வந்திடுநோய்-ஒதுகின்ற
புண்புரையும் வல்விடமும் போகும் திரண்டுருண்டே
பண்புறுபுங் கம்வேர்க்குப் பார்''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 508

பெருங்காயம்:

''தந்த வேதந்த மூலத்தெ ழும்பிணி
சருவ காளம் விருச்சிகங் கீடம்மா
மந்தம் வாதம் உதாவர்த்தம் அல்குல்நோய்
மார்ப ணங்கட்ட குன்மம் மகோதரம்

''உந்து கெர்ப்பத்தின் வித்திரஞ் சூலைச்சூர்
உதிரப் பூச்சி சிலேத்துமத் துறும்வலி
வந்த மெய்க்கடுப் போடிவை முற்றுமே
மாயு நாறுநற் காயங் கிடைக்கினே''

''நீளப்பா பெருங்காயம் தீபனமுண் டாக்கும்''

''அட்டகுன் மங்க ளணுகாது ஆகமத்தில்
ஒட்டிய வாயுதிரட்சி யோடுமே - முட்டவே
அருங்காயம் புட்டியாம் ஆரிழையீர் கேளீர்
பெருங்காய முண்டுகுணம் பேசு''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 521

மனோசிலை:

''.............................கொடிய குஷ்டம்
காய்ச்சல் நடுக்கலஜ கல்லியிரைப் புச்சிலந்திப்
பேசரும னோசிலைக்குப் பேசு''

குணபாடம் (தாதுசீவ வகுப்பு) பக். 200

மிளகு:

''அளவையுறாக் காரம் அடைந்திருக்கும் வாத
விளைவையெல் லாமறுக்கும் மெய்யே -
மிளகின்காய்
கண்டவர்க்கும் இன்பமாங் காரிகையே சிழ்மூலங்
கொண்டவர்க்கு நன்மருந்தாங் கூறு''

''சீதசுரம் பாண்டு சிலேத்துமங் கிராணிகுன்மம்
வாதம் அருசிபித்தம் மாமூலம் - ஓதுசன்னி
யாசமபஸ் மாரம் அடன்மேகம் காசமிவை
நாசங் கறிமிளகி னால்''

''கோணுகின்ற பங்கவலி குய்யவுரோ கம்வாத
சோணிதங்க ழுத்திற்குள் தோன்றுநோய்-காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தமென்றீர்
ஏதுநோய் காயிருக்கில் ஈங்கு''

''தீயாகி யெங்கும் திரியுமதை யாவத்து
மோயாம லெப்படியு முண்டாக்காற் - பாயாது
போந்திமிர்வா தங்கிரந்தி புண்ணீரும்
மண்ணவர்க்கும்
காந்திமெய்வா தச்சலுப்பைக் காய்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 557

முருங்கை ஈர்க்கு:

''நீரான விந்துவுமோ நீண்டபிசி னாய்த்தடிக்குஞ்
சீராக மேனி செழிக்குங்காண் - பாராய்
முருங்கை விதையதனால் மொய்த்தயிலை ஈர்க்கோ
ஒருங்கையுற நீரிறக்கும் உன்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 565

முருங்கைப்பட்டை:

''முருங்கைவேர்ப் பட்டைக்கு மூடு கபத்தோ
டொருங்குறாச் சன்னிசுரம் ஓடும் - அருங்கனக
வட்டைப் பொருமுலையாய்! வாய்வொடுவி
டங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 565

மேதிப்பால் (எருமைச் சாணப்பால்)

''வயிற்றுப் பிசமிரத்த வாந்திகா மாலை
நியப்பெரும் பாடுபுண் ணிங்கும் - வியத்த
கருமைச்சா ரங்கவிழிக் காரிகையே நாளும்
யெருமைச் சாணத்தி னியல்பு''

குணபாடம் (தாதுசீவ வகுப்பு) பக். 376

வசம்பு:

''பாம்பாதி நஞ்சற் புதப்புண் வலிவிடபா கங்குன்மம்
சூம்பா ளூத்தபித் தம்முக நாற்றம்வன் சூலைசன்னி
வீம்பாம்பை காசம் பிலிகஞ் சீலிபதம் விறிருமல்
தாம்பாங் கிருமி யிவையேகு மாசிவ சம்பினையே''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 576

விலாமிச்சு வேர்:

''மேகம் விழியெரிச்சல் வீறிரத்த பித்தமொடு
தாகமத மூர்ச்சைபித்தந் தள்மயக்கம் - சோகஞ்
சிரநோய் இவையேகுஞ் செய்யவிலா மிச்சுக்
கெரிசுரமும் இல்லை யிசை''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 597

வெங்காரம்;

''சொறிபுடையெண் குன்மநமை சோரி யரசம்
பறிகிரகணி கல்லூனம் பன்னோய் - நெறியைத்
தடங்கணங்க பங்கிருமி சர்ப்பவிடஞ் சந்நி
யிடங்கணங் கலக்கிற்போ மெண்''

''வெங்காரக் குணமி தென்று
விதமுட னுரைக்கக் கேளாய்
சங்கார மாகுந் தோஷந்
தன்னையே சங்க னக்கு
முங்கன லுதவி யில்லா
வுதரத்தில் வாயு மாற்றும்
பொங்கிய இருமல் மாந்தம்
போக்கிடு முண்மை தானே''
குணபாடம் (தாதுசீவ வகுப்பு) பக். 251

வெள்ளரிப் பிஞ்சு:

''பிஞ்சுவெள்ள ரிக்காய்க்குப் பேசுதிரி தோடம்போம்''
குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 614

வெள்வெங்காயம் (வெள்ளைப் பூண்டு):

''சன்னியோடு வாதந் தலைநோவு தாள்வலி
மின்னிவரு நீர்க்கோவை வன்சீதம் - அன்னமே
உள்ளுள்ளிக் கண்டால் உளைமூல ரோகமும்போம்
வெள்ளுள்ளி தன்னால் வெருண்டு''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக் 616

வெற்றிலை:

''ஐயம் அறுங்கான் அதன்சாரங் கொண்டக்காற்
பையச் சயித்தியம்போம் பைந்தொடியே-மெய்யின்
கடியின் குணம்போகுங் காரவெற்றி லைக்குப்
படியுமுத் தோடமிதைப் பார்''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 617

வெண்ணெய்:

''வெண்ணெயை யுண்டிட விந்துவைப் பெருக்கிமேற்
றண்ணென மெய்வலி தனக்குர மாகுமே''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 406

வேப்பெண்ணெய்:

''வாதம்போம் பித்தமிகும் மாறாக் கிரந்தியொடு
மோதுகரப் பான்சிரங்கு முன்னிசிவும்-ஓதுடலின்
நாப்ப ணுறுசுரமு நாடுசன்னி யுந்தொலையும்
வேப்பநெய் யென்றொருக்கால் விள்ளு''

குணபாடம் (மூலிகை வகுப்பு) பக். 624

## இந்நூலிலுள்ள மருந்துப் பொருட்களின்
## கலைச்சொல் அகர வரிசை
### (அடைப்பில் உள்ளவை பாடலெண்கள்)

அகத்தி (16, 37, 43) Sesbania grandiflora

அதிமதுரம் (15) Glycyrriza glabra Linn

அரசங்கொழுந்து (11, 36) Ficus religiosa

அரிதாரம் (2) Trisulphuret of Arsenic

அவுரி (16) Indigofera tinctoria

ஆட்டுப்பால் (12) Goat's miik

ஆமணக்கெண்ணெய் (37) Castor Oil - Ricinus Communis Linn

ஆவின் நெய் (54) Ghee

ஆவின் பால் (11, 21, 34, 35, 36, 40, 46, 53) Cow's milk

ஆவின் வெண்ணெய் (15, 16, 23) Butter

இஞ்சி (5, 14, 30, 33, 38, 40, 43) Zingiber officinale

இந்துப்பு (2) Sodium chloride impure (Rock salt)

இரசம் (2) Hydrargyrum (mercury)

இலவங்கப்பத்திரி (15) Cinnamomum tamala

இளநீர் (31) Tender coconut - cocos nucifera Linn

உமிழ்நீர் (6, 18) Saliva

எருக்கில் வேர் (14) Calotropis gigantea

எலுமிச்சம்பழம் (24, 44, 53) Citrus limon

ஓமம் (2) Carum copticum Benth

கஞ்சா (7) Cannabis sativa

கடுகு (2) Brassica juncea

கடுக்காய் (4, 28, 40) Terminalia chebula

கருஞ்சீரகம் (2) Nigella sativa

கருப்புக்கட்டி (39, 46, 48) palm sugar

கழற்சியிலை (9) Caesalpinia bonducella

கற்றாழை (6) Aloe vera

காடி (31, 33, 45) Ferment

கிராம்பு (15, 29) Eugenia Caryophyllata

குப்பை மேனி (19, 20) Acalypha indica Linn

கொத்துமல்லி (42) Coriandrum sativum

சங்கங்குப்பி (7) Clerodendron inerme

சந்தனம் (6) Santalum album

சர்க்கரை (25) sugar

சாணப்பால் (4) Cow dung juice

சாதிக்காய் (52) Myristica fragrans

சாம்பிராணித் தயிலம் (47) Styra benzoin

சாரணைவேர் (13) Trianthema decandra

சித்திரமூலம் (20) Plumbago zeylanica

சீரகம் (12, 25) Cuminum cyminum

சுக்கு (4, 7, 26, 27, 30) Zingiber officinale

செம்மறியாட்டுப் பால் (47) Milk of the red sheep

தயிர் (6) Curd

தாய்ப்பால் (49, 50, 51) Breast Milk

தாழை விழுது (8) Pandanus odoratissimus

தாளிசப்பத்திரி (15) Flacourtia cataphracta

தாளியிலை (16) Borassus flabellifer

திப்பிலி (29, 40, 42) Piper longum

திரிகடுகு (22)
- சுக்கு - Zingiber officinale
- மிளகு - Piper nigrum
- திப்பிலி - Piper longum

திருகு கள்ளி (14) Euphorbia antiquarum

துளசியிலை (16) Ocimum sanctum

தூதுவளை (54) Solanum trilobatum

தேங்காய்ப்பால் (38)

தேன் (5) Honey

நல்லெண்ணெய் (44) Gingelly ojl

நாபி (2, 29) Aconitum ferox wall

நாரத்தங்காய் (54) Citrus aurantium Linn

நாவல்பட்டை (12) Eugenia jambolana

நெய் (4, 21) Ghee

நேர்வாளம் (3) Croton tiglium

நொச்சி (7, 13, 22, 42) Vitex negundo

| | | |
|---|---|---|
| பஞ்சமூலம் (41) | கண்டுபாரங்கி | Clerodendron serratum |
| | சித்திரமூலம் | Plumbago zeylanica |
| | சுக்கு | Zingiber officinalis |
| | செவ்வியம் | piper nigrum root |
| | பேரரத்தை | Alpinia galanga |

புகையூறல் (19) Nicotiana tabacum

புங்கு (14) Pongamia glabra

புளி (20) Tamarindus indicus

பெருங்காயம் (2) Ferula asofoetida

பொன்னாங்காணி (54) Alternanthera sessilis

மலைதாங்கி (29) Sida acuta

மனோசிலை (2) Bisulphuret of Arsenic

மிளகு (4, 5, 7, 13, 17, 19, 21) Piper nigrum

முருங்கை (54) Moringa oleifera Lam

முருங்கையிலை (53) ,, ,, ,,

முருங்கை ஈர்க்கு (25) Moringa pterygosperma

முருங்கைப்பட்டை (14) Moringo oleifara Lam

மோர் (3, 24) Butter Milk

வசம்பு (23, 24, 25) Acorus calamus

வாழைக்காய் (54) Musa sapientum

## பாட்டு முதற்குறிப்பகர வரிசை (எண்-பாட்டெண்)

# துணை நூற் பட்டியல்

அகத்தியர் அமுத கலைஞானம் 1200: சண்முக முதலியார் 1938.

அனுபோக வைத்திய பிரம்ம ரகசியம்: முதற்பாகம் சிறுமணவூர் முனிசாமி முதலியார்: 1923.

ஆத்மரட்சாமிர்தம் என்னும் வைத்திய சார சங்கிரகம்: வே. கந்தசாமி முதலியார், 1905.

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு ஆராய்ச்சிக் கட்டுரைகள்: மு. அருணாசலம்: 1981.

கலைக்களஞ்சியம்: பதிப்பாசிரியர்: தி. சு. அவினாசிலிங்கஞ் செட்டியார், 1954.

குணபாடம் - மூலிகை வகுப்பு: க. நா. குப்புசாமி முதலியார், 1952.

குணபாடம் - மூலிகை வகுப்பு: (தாதுசீவ வகுப்பு) டாக்டர் ஆர். தியாகராஜன், 1970.

சகஸ்ர சித்த யோகம்: இரண்டாம் பாகம்: எஸ், கிருஷ்ணராவ், 1933.

சித்த மருத்துவாங்கச் சுருக்கம்: க. சு. உத்தமராயன், 1953.

சித்த வைத்தியத் திரட்டு: டாக்டர் க. நா. குப்புசாமி, டாக்டர் க. சு, உத்தமராயன், 1951.

தன்வந்திரி வைத்திய காவியம் 1000: கந்தசாமி முதலியார், 1888.

தேரையர் சேகரப்பா: டாக்டர் இரா. தியாகராஜன், 1971.

நோய்களுக்கு சித்தப்பரிகாரம்: டாக்டர் ம. சண்முகவேலு, 1972.

மருந்து செய்முறைகள்: தி. லலிதா, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1985.

யூகிமுனிவர் கும்மி 1000: குரு. இராமசாமிக்கோன், 1936.

வைத்தியத் திருப்புகழ்: இரண்டாம் பதிப்பு: டாக்டர் இரா. தியாகராஜன், 1975.

வைத்திய மூலிகை அகராதி: கந்தசாமி முதலியார், 1924,

வைத்திய வாத யோக ஞான சாத்திரத் திரட்டு: இரா. குருசாமிக்கோன், 1917.

# ஆத்மரட்சாமிர்தமென்னும் வயித்திய சாரசங்கிரகம்

வே. கந்தசாமி முதலியார்—1905

(பக்கம் 518)

## அகத்தியர் குழம்பு

பெருங்காயம், இந்துப்பு, கடுகுரோகிணி, வெங்காரம், கருஞ்சீரகம், திப்பிலி, சுத்தி செய்த இரசம், நாபிக்கிழங்கு, மனோசிலை, தாரம் வகைக்கு விராகனெடை - 1, சுத்தி செய்த வாளப்பருப்பு விராகனெடை-10, காட்டாமணக்கின் முத்துப் பருப்பு விராகனெடை-5, இவைகளையரைக்க மெழுகாகும். அதைச் சிமிழிலடைத்துக் கொண்டு, விராகனெடை இஞ்சிச் சுரசத்திலாவது சுக்குக் கியாழத்திலாவது, குளிர்சுரம், சன்னிசுரம், அண்டவாதம், வாயு, மூலவாயுவும், கடுக்காயில் இருமலும், கடுக்காய்க் கியாழத்தில் பித்தசுரம், திப்பிலிக் கியாழத்தில் சிலேத்தும சுரமும்; கிராம்பு, மலைதாங்கி வேருஞ் சேர்த்துச் செய்த கியாழத்தில் பேதி சுரமும், சுக்கும் மிளகு கியாழத்தில் குளிர் சுரமும், ஆவின் நெய்யில் இரத்த மூலமும், ஆவின் பாலிற் பாண்டும், மிளகுத்தூள், வெள்ளுள்ளியில், மகோதரம் பெருவயிறு. நீராமை, குன்மமும், தேன் இஞ்சிச் சாற்றில் சன்னியும், சுக்கும் நொச்சியுஞ் சேர்ந்த கியாழத்தில் வாயுவும், சங்கங்குப்பிச் சாற்றிலாவது, மிளகு பொரித்த பொரிகாரம், கற்கண்டு இவைகளைப் பொடித்து நெய்யில் மத்தித்து அதிலாவது வெள்ளரிப் பிஞ்சுச் சாற்றிலாவது, இளநீரிலாவது, காடியிலாவது கொடுக்க நீர்க்கடுப்பு நீர்ச்சிறுப்பு கல்லடைப்பும், வெள்ளுள்ளித் தைலத்தில் அல்லது வெள்ளுள்ளி, கழற்சி, முசுமுசுக்கைக் கியாழத்தில் சன்னி 18, அரசங்கொழுந்தை ஆவின் பால் விட்டரைத்துக் கொட்டைப் பாக்குப் பிரமாணம் மூன்று பங்கு நாளொன்றுக்கு ஒரு பங்கிற் கொள்ள கெர்ப்பரோகம், நாவற் பட்டையில் வெள்ளாட்டுப் பால் விட்டிடித்துப் பிழிந்த சாற்றில் சீரகப் பொடிதூவி அதிலாவது அல்லது நொச்சி வேர், பங்கம் பாளை வேர், சுக்கு, மிளகு இவைகளைச் சேர்த்துச் செய்த கியாழத்திலாவது கொடுக்கச் சூதகவாயுவும், வாயுக்கட்டியும், இஞ்சி; வெள்ளுள்ளி, முருங்கைப்பட்டை, எருக்கம் வேர், திருகுகள்ளிவேர், புங்கம் வேர் இவைகளைத் தட்டிப் பிழிந்த

சுரசத்தில் உட்குத்துப் புறவிச்சும், கருப்புக்கட்டி சித்திரமூலம் இவைகளைக் குப்பைமேனிச் சாற்றாலாட்டித் தேன் விட்டு மத்தித்து அதிலாவது வில்வம், இலவங்கப் பத்திரி, கிராம்பு, அதிமதுரம், தாளிசப் பத்திரி, இவைகளைச் சேர்த்துச் செய்த கியாழத்தில் வெண்ணெய் போட்டுக் கொடுக்க நெஞ்சுவலியும், தாளியிலையும், அவுரியிலையும், வெண்ணெயுஞ் சேர்த்தரைத்துக் கொட்டைப் பாக்குப் பிரமாணத்தில் விரியன் கடியும்; நாவற் கொழுந்து, மிளகு, வெற்றிலையுஞ் சேர்த்தரைத்துக் கொட்டைப் பாக்குப் பிரமாணத்தில் நல்லரவின் விஷமும்; ஈருள்ளிச் சாற்றில், உள்ளுக்குக்கொடுத்துக்கடிவாயில் தடவத் தேட்கடியும், வெல்லம், புகையூறல், பேய்ப்பீர்க்கம்வித்து இவைகளை மேனிச் சாற்றி லரைத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணத்தில் வழலைக்கடியும், நொச்சிச் சுரசத்தில் திரிகடுகுப் பொடி தூவிக் கொடுக்க விஷபாக விக்கம்; காடியில் மூலவியாதியினால் சீதம் விழுதலும், கெர்ப்பவிப் புருதியும், கர்ப்பரோகமும்; ஆவின் நெய்யில் மூலத்தினாலிரத்தம் விழுதலும்; அகத்தியிலைச் சாற்றில் மகோதரமும் வெட்டையும்; விளக்கெண்ணெயில் வாயுத் திரட்சியும், தேங்காய்ப்பாலில் கழல் வாதமும்; கருப்புக்கட்டியில் ஆனந்த வாயுவும் சுரமும்; ஆவின் பாலிற் பித்தமும் பஞ்ச மூலக் கியாழத்தில் சன்னி 13-ம்; இஞ்சிச் சுரசத்தில் குன்மம் 8 ம் வெல்லத்தில் தாப சுரமும்; நொச்சிச் சாற்றில் வாத சுரமும்; கொத்துமல்லிக் கியாழத்தில் நடுக்கல் ஐயசுரமும்; வெள்ளாட்டுத் தயிரில் வயிற்றுக்கடுப்பும், கருப்புக் கட்டியில் சூலை 18ம், கிரந்தியும், ஆவின் தயிரில் சூதக வாயுவும்; விலாமிச்சை வேர்க்கியாழத்தில் பித்தவெட்டை; செம்மறியாட்டுப் பாலிலாவது சாம்பிராணித் தயிலத்திலாவது, திரளாத பெண்ணுக்கு 9 நாளும்; திரிகடுகில் பலரோகங்களும்; வெற்றிலைச் சாற்றில் விஷமும்; சாதிக்காய்ப் பொடியில் அசாத்திய சுரமும் நீங்கும்.

மேற்படி குழம்பை நல்லெண்ணெயில் மத்தித்துப் போட ரணம் நீங்கும்.

வேப்பெண்ணெயும். நல்லெண்ணெயும் கலந்து அதிற் குழம்பை மத்தித்துப்போட, ஆறாத ரணம் ஆறும். சிலந்தி, அரையாப்பு, பிளவை, புற்றுக்கு உமிழ் நீரிலாவது தேனிலாவது, குழம்பை மத்தித்துப் போடத் தீரும். முலைப்பாலில் மத்தித்து

நாசியில் நசியமிடத் தலையிடி நீங்கும். முலைப்பாலில் மேற்படி மருந்தை மத்தித்து நெரிகளிற் பூச நீங்கும்.

மரங்களேறி விழுந்து மயங்கின பேர்களுக்கும், தண்ணீரில் அமிழ்ந்து மயங்கினவர்களுக்கும் கடுகு பிரமாணம் முலைப்பாலில் மத்தித்துக் கண்ணிற்போட நீங்கும். குழம்பைத் துணியிற்றடவிப் புகைபிடிக்க முகவாத சன்னி, பற்கிட்டு, விஷக்கடி. கபால வலி, பேய் பிசாசு நீங்கும். வேப்பெண்ணெயிலாவது, சுக்குக் கியாழத்திலாவது, எள் . பிரமாணம் உரைத்துக் கண்ணிலிடச் சன்னி நீங்கும். கண் வீங்கி, வேதனை கண்டால் சுடுசோறும், தயிரும், சந்தனமும் மத்தித்துக் கண்ணிற் கட்ட நீங்கும்.

மேற்படி குழம்பினாலும், மற்ற வாளஞ் சேர்ந்த மாத்திரையினாலும் பேதியதிகரித்தால் அதற்கு மாற்று வசம்பைச் சுட்ட கரியையாவது, ஒரு பிடி முருங்கையீர்க்கையாவது கியாழஞ் செய்து கொடுத்தாலும் எலுமிச்சம்பழ ரசமும், ஆவின் பாலுங் கொடுத்தாலும், புளித்த மோர், காடியைக் குடித்தாலும், காட்டாமணக்கின் கொழுந்தை காடியிலவித்துத் தொப்புளில் வைத்துக் கட்டினாலும், கோழிரசஞ் சாப்பிட்டாலும் பேதி நிற்கும்.

# ஸஹஸ்ர வித்த யோகம் (இரண்டாம் பாகம்)

## எஸ். கிருஷ்ண ராவ் — 1933

### (பக்கம் 8 குழம்பு வர்க்கம்)

### அகஸ்தியர் குழம்பு (தனிப்பாடல்)

சுத்தி செய்த ரஸம், தாளகம், மனோசிலை, வெங்காரம், இந்துப்பு, கடகரோஹிணி, பெருங்காயம், கருஞ்சீரகம், அரிசித் திப்பிலி வகைக்குக் கழஞ்சு 1, வாளம் கழஞ்சு 9, இவைகளுள் முற்கூறிய 5 சரக்குகளை முறைப்படிக் கல்வத்திலிட்டரைத்துப் பொடித்து வைத்துக் கொள்க. மீதி 5 சரக்குகளுக்குள் வாளத்தைத் தவிர்த்து மற்றவைகளைப் பொன்னிறமாய் வறுத்துப் பொடித்து வஸ்திரகாயஞ் செய்து முன் மருந்துடன் கூட்டியரைத்துக் கலந்த பின்னர், வாளத்தைச் சித்தாமணக்கெண்ணெய் தெளித்துப் பதமாய் வறுத்து அதனை ஒவ்வோர் பருப்பாய்க் கூட்டி 4 ஜாமம் நன்றாயரைத்து மெழுகு பதத்தில் வழித்துக் கொம்பு டப்பியிலடைத்து வைத்துக் கொள்க. ரஸத்திற்குப் பதில் ரஸபதங்கத்தினைக் கூட்டிச் செய்வது சாலச் சிறந்தது என்க. வாளத்தை ஒவ்வொர் பருப்பாய்க் கூட்டி யரைப்பதே இம்மருந்தினுக்குள்ள ரகசிய கைபாகம். இதனைத் தன்வந்திரி வைத்திய காவியம் 1000த்தில் காண்க. இம்மருந்தினைப் பழையதும், தயிருமாய்த் திருப்தியாய்ப் புசித்த பின்னர் அரைத்தல் வேண்டும், தேக, தேச கால வயதிற்குத் தக்கவாறு இதனை உளுந்து, மிளகு, குன்றியளவு உபயோகித்தல் வேண்டும். இது நன்கு பேதியாகக் கூடிய மருந்தாதலால் குறைந்த அளவில் காலை நேரத்தில் மாத்திரம் உபயோகிக்கவும்.

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு — கருத்தரங்கு
ஆய்வுக் கட்டுரைகள் (தொகுதி - 3) 1981:
பதிப்பாசிரியர்: மு. அருணாசலம்
கட்டுரையாசிரியர்: ந. சேதுரகுநாதன்

அகத்தியர் குழம்பு

(பக்கம் 386 - 394)

''உண்மையாய் நம்முடைய குழம்பைக் கேளு
உறுதியுள்ள பெருங்காயம் இந்துப் போடு
தன்மையுள்ள கடுகுரோ கணியுங் கூட்டித்
தயவான ரசமுடனே காரம் கூட்டி
நன்மையுள்ள நிருவிசமும் சிலையும் தாரம்
நல்லகருஞ் சீரகந்திப் பிலியும் சேர்த்து
வன்மையுடன் தொகைபார்க்கப் பத்து மாச்சு
வரிசையுடன் சரிஎடையால் வாங்கிக்
கொள்ளே''

''வாங்கியதோர் மருந்துக்கு எடைதான் வாளம்
வளமாக அதற்கரைதான் பச்சை சேர்த்துப்
பாங்குடனே கல்வத்தி லிட்டுக் கொண்டு
பக்குவமாய் ஈராறு சாமம் ஆட்டித்
திங்கில்லா முப்பூவும் பத்துக் கொன்று
சேர்த்துநீ திறமாகச் சாமம் ஆட்டு
சாங்கமாய் மருந்தரைக்கும் போதில் மைந்தா
தயிருடனே சோறுண்டு தயவாய் ஆட்டே''

''ஆட்டிநன்றாய் வழித்தெடுத்து மேதிக் கொம்பு
அமைவான சிமிழதனிற் பதனம் பண்ணி
நாட்டிலே மானிடர்க்கு வரும்நோய்க் கெல்லாம்
நலமான அனுபானம் அறிந்து செய்தால்
வாட்டமுடன் ஓடிவிடும் மைந்தா மைந்தா
மகத்தான வித்தையடா குழம்பைத் தேடித்
தேட்டமுடன் அதன்சிறப்பைத் தெரிந்து கொண்டு
சிவசிவா நம்முடைய பெயர் வைத்தாரே''

''பேர்வைத்தா ரென்றால் மைந்தா கேளு
பெருமையுள்ள சித்தர்தபோ தனர்கள் கூடி
நேர்வைத்த மருந்துருகுங் குறிப்பைக் கண்டு
நேர்மையுள்ள அகத்திசர் குழம்பென் றார்கள்
பார்வைத்த அகத்திசர் பண்ப றிந்தால்
பதனறிந்தோர் குழம்புறுதி யறிவா னப்பா
கூர்வைத்த குழம்புறுதி யென்ன வென்றால்
குணமான பச்சையடா வுயிரு மாச்சே''

''உயிரான பச்சைதனை யறிந்து கொண்டு
உண்மையாய் நம்முடைய குழம்பு பண்ணிப்
பயிரான மானிடர்க்கு வருநோய் கண்டு
பாய்ச்சுகிற விதமுனக்குப் பகருவேன் கேள்''
— அமுத கலைஞானம் 1200 (900 - 904)

இந்த நாலரைப் பாடலில் கூறப்பெற்ற அரிய மருந்திற்குரிய பொருள்களையும் பச்சை என்பதனையும் கூட்டியும் குறைத்தும் மாறுபடக் கொண்டும் பல்வேறு வகையாக எழுதியும் செய்தும் வழங்கியும் பழகினவர்கள் எத்துணை மாற்றங்கள் செய்துள்ளனர் என்ற விளக்கம் ஆராயப் பெறும்.

பொருள்கள்

1. பெருங்காயம்
2. இந்துப்பு
3. கடுகுரோகிணி
4. இரசம்
5. வெங்காரம்
6. நிருவிசம்
7. மனோசிலை
8. தாரம்
9. கருஞ்சீரகம்
10. திப்பிலி

இப்பொருள்கள் பத்தும் ஒன்றுக்கு ஒன்று நேர் அளவாகப் பத்துக் கழஞ்சு எடுத்துக் கொள்க. நேர்வாளங் கொட்டையை யுடைத்துப் பருப்பு எடுத்துக் கறி உள்முளை போக்கி வறுத்து எடுத்துப் பத்துக் கழஞ்சு எடை முன்கூறிய பத்துக் கழஞ்சு மருந் துடன் சேர்த்துக் கல்வத்திலிட்டு (குழிக்கல்லில் போட்டு) நன்றாய் அரைத்து பின் உயிரான பச்சை என்று அகத்தியரால் பாடலில் கூறப்பெற்ற முட்டையின் மஞ்சட்கரு ஐந்து கழஞ்சு உடன்

சேர்த்துப் பன்னிரண்டு சாமம் சேர்த்து நன்றாய் அரைத்துப் பின்பு நல்ல வைத்தியமுப்பூ பத்திலொரு பங்கு (2½ கழஞ்சு) சேர்த்து மேலும் ஒரு சாமம் ஆட்டி எடுத்து எருமைக் கொம்புச் சிமிழில் அடைத்து வைத்துக்கொள்க.

நூலில் கூறிய துணை மருந்துடன் சேர்த்து நோய்களுக்கு வழங்குக. இனி இதனை ஆராய்வோம்.

மேற்கூறிய பாடலில் உயிரான பச்சை என்பதனை இன்ன பொருளென்று அறிய முடியாமல் பலர் பலவகையாகப் பொருள் கொண்டனர். கோரக்கர் தாம் இயற்றிய முத்தாரம் 91 என்ற நூலில் முப்பதாம் பக்கத்தில் ''அமிர்த சஞ்சீவிக் குழம்பு'' கூறி வரும் பகுதியில் பச்சைக்கு விளக்கம் கூறியுள்ளார்.

**''கார்ப்பதற்காய் முட்டைமஞ்சட் கருவும்பச்சை யாச்சே**
**கனதுரிய சித்தர்இதை மறைத்துவைத்தார் பேச்சே**
**நேர்பெரிய அகத்தியர்சொல் பச்சைஇது வாச்சே**
**நிலைமையுடன் பரிபாஷையாய்**
**விரைந்துவைத்தார் பூச்சே**
**ஆர்கலிதீர் குழம்புமெழுகில் அண்டமிட்டுப் பாய்ச்சே**
**அரியபச்சை முட்டைக்கரு தெரியசந்தேகம் போச்சே**
**பார்பதினெட்டுமக்கள்சொன்ன நுட்பமறியாதது ஏச்சே**
**பலவிதமாய் எண்ணங்கொண்டு பாரோர்திரிய**
**லாச்சே''**

இங்ஙனம் கூறியதனை அறிய இயலாமல் பிறழ உரை கொண்டனர்.

1. ''வாங்கியதோர் மருந்துக்கு எடைதான் வாளம் வளமாக அதற்கரைதான் பச்சை சேர்த்து'' என்பதற்குக் கடையில் வாங்கிய'' பத்து மருந்தின் எடைக்கு நேரளவு வாளமும் அதற்குப் பாதியளவு பச்சை என்ற பொருளும் சேர்த்து'' என்று பொருள் கொள்ளுவதே மொழி நடைக்குப் பொருத்தம். அங்ஙனம் கொள்ளாமல் ஒருவர் அகத்தியர் பாடியதாகத் தாம் பின்பு பாடிய பாடலில் ''வாங்கிய கழஞ்சுக் கொப்ப வாளமும் வறுத்துப் பாதி தாங்கிய பச்சை பாதி' என்று செய்யுள் யாத்தார்.

நேர்வாளப் பருப்புப் பத்துக் கழஞ்சு அளவில் பாதியை வறுத்தும், பாதியைப் பச்சையாகவும் சேர்க்க வேண்டுமென்று இவர் பாடினார். மேலும் இவர், ''பருவதந்தன்னில் வாழும்'' என்று தொடங்கிய பாடலின் இறுதியில் ''பேசினார் முனிவர் தானே'' என்று அகத்தியரைக் குறிப்பிட்டுப் பின்பு, பேசிய மருந்து கேளாய்'' என்று தொடங்குகின்றார். அகத்தியர் ''குணமான பச்சையடா உயிருமாச்சே'', ''உயிரான பச்சைதனையறிந்து கொண்டு உண்மையாய் நம்முடைய குழம்பு பண்ணி'' என்ற பகுதியை அந்தப் பின்பாட்டு எழுதிய அவர் நன்றாய் உணராமல் நேர்வாளங்கொட்டைப் பருப்பில் பாதியைப் பச்சையாகவும் பாதியை வறுத்தும் சேர்க்க வேண்டுமென்று குறித்தார். வறுப்புக்கு இடம் வகுத்த இவர் பச்சை என்பதனைத் தன் மனம் போலவே சொன்னார்.

2. மேலும், அகத்தியர் ''கடுகுரோகணி'' என்று கூறியிருக்க இவர் ''கடுகு இந்துப்பு'' என்று பாடினார். ஆகவே, கடுகு ரோகணிக்குப் பதிலாகக் கடுகினைச் சேர்க்கும் வழக்கம் உண்டா யிற்று. யூகிமுனிவர், 'கடுகுரோகணி', என்ற சொல்லுக்குப் பிறர் கடைக்குறை செய்து 'கடுகு' என்று பாடிய குற்றத்தை யுணர்ந்து, முதற்குறை செய்து ''ரோகணி'' என்றே பாடினர். கடுகும் கடுகு ரோகணியும் சேர்த்து விடுவார் என்று அஞ்சினார் போலும்.

3. அகத்தியர் ''திப்பிலி'' சேர்த்திருக்கப் பின்பாட்டுக் காரர் அதனை விடுத்து 'ஓமம்' சேர்த்தார். நிருவிஷம் என்பதற்குப் பலர் நாவிக் கிழங்கினைச் சேர்த்தனர். சித்த வைத்தியத்திரட்டும் நாவியையே சேர்த்தது.

4. யூகிமுனிவர் 'நாவி'யை நீக்கிச் சுக்குச் சேர்த்தார்.

5. ''அமுது'' என்ற சித்த மருத்துவ இதழில் பச்சை என்பதற்கு ''பச்சைக் கற்பூரம்'' சேர்த்துச் செய்தல் வேண்டுமென எழுதப்பட்டுள்ளது, கோரக்கர் நவதசாமிர்த மெழுகிலும் பச்சைக் கற்பூரம் சேர்கிறது.

6. பச்சையாகிய முட்டைக்கருச் சேர்க்கும்படி பாடிய அகத்தியர் மோர் விட்டு அரைக்கச் சொல்லவில்லை, ''தயிருடன் சோறுண்டு தயவாய் ஆட்டே'' என்றார்.

7. பின்பாட்டுக்காரர், ''ஓங்கிய மோரும் சோறும் உண்டு பின் அரைத்துக்கூட்டே'' என்று பாடினார். அரைப்புக்கு ஊற்ற வேண்டிய துணைச் சாறு அல்லது நீர் எதுவும் கூறவில்லை.

8. யூகி முனிவர் பச்சை என்பதற்கு வாளம் நீங்கலாக ஏனைய பொருள்களைப் பச்சையாக நிறுத்துச் சேர்க்க வேண்டு மென்றார். அதன் குறிப்பு பெருங்காயம், கடுகுரோகணி, வெங் காரம், கருஞ்சீரகம், திப்பிலி ஆகியவற்றை வறுத்தல் வேண்டாம் என்பதாகும். ''அஞ்சித் திரிந்தாலே பச்சை பச்சையென்றதாகுங் குழம்பு வலுவாமோ'' [கும்மி 1000 த்தில், 309] என்றார். அதனால் இம்மருந்தினைப் பச்சை வெட்டு மருந்து என்று அவர் பொருள் கொண்டார். இரசம், தாரம் இவற்றைப் பற்பமோ, செந்தூரமோ செய்யாமல் பச்சையாகச் சேர்ப்பதாலும் பச்சைவெட்டு என்று கருதினர். அத்துடன் அரைப்புக்குக் ''காதலாய் ஆவின் மோர் விட்டரைத்து'' என்றார். அதனைப் பின்பற்றிய பலர் மோர் விட்டரைத்தனர்.

9. பிராண ரக்ஷாமிர்த சிந்து என்ற நூலாசிரியர் பச்சை என்பதற்கு நேர்வாளத்தில் பாதியளவு நாட்டுக் காட்டாமணக்கின் பருப்புச் சேர்க்க வேண்டு மென்றெழுதியுள்ளனர் [பக்கம் 218].

10. கவுசிகர் சௌபாக்கியக் குழம்பில் அகத்தியர் கூறிய பத்துப் பொருளில், கருஞ்சீரகத்துக்குப் பதில் சீரகம் சேர்த்தும் மேற்கொண்டு கடுக்காய், கடுகு ஆகிய இரண்டு பொருளும் சேர்த்தார். இவர் கடுகுரோகணி என்பதனைக் கடுகும் ரோகணியும் என்று சேர்த்தாரோ அல்லது இருதிறத்தார் சேர்ப்பனவற்றையும் சேர்ப்போமென்று சேர்த்தாரோ, சேர்த்தே விட்டார் [கண்ணுசாமி பரம்பரை வைத்தியம் பக்கம் 200] இவர் பச்சைக்குப் பதில் உத்தாமணி இலைச்சாறு [வேலிப்பருத்தி] விட்டு அரைக்கச் சொல்லியுள்ளார். போகர் 700 இல் கூறிய சண்ட மாருதக் குழம்பிற் சேர்ப்பதுபோல் தென்னங் குடுக்கைக் கரியும் சேர்த் துள்ளார். பனங்கருப்பட்டியும் சேர்கிறது.

11. திரு. டி, வி. சாம்பசிவம் பிள்ளையகராதியில் கடுகும் ஓமமுமே சேர்க்கப்பட்டுள்ளன. ஆனால் 'அகத்தியர் வாகடப்படி' என்று முதலில் குறித்துள்ளனர், இவரும் அகததியர் பாட்டின் வண்ணம் கூறவில்லை. பின்பாட்டுக்காரரின் கை வண்ணத்தையே

காட்டினார். அரைப்புக்குத் துணை மருந்து கூறவில்லை. ''இதை பண்டைக் காலத்தில் மாட்டுக் கொம்பில் பதனப்படுத்துவது வழக்கம். இத்துடன் முப்புச் சேராவிடில் எல்லா வியாதிகளுக்கும் பயன்படாதெனக் கருதப்படும் என்றும் எழுதியுள்ளனர் [போகர் 700இல் சண்டமாருதக் குழம்பினை எருமைக் கொம்பினில் அடைக்கும்படியே கூறியுள்ளனர்.] ஆங்கிலத்திலும் வரைந் துள்ளனர்.

12. என்னிடம் உள்ள ஏட்டுச் சுவடியில் வெள்ளைப் பாடாணம் சேர்த்து எழுதப்பட்டுள்ளது. நிருவிஷம் என்பதற்குப் பதிலாக வெள்ளையைச் சேர்த்தனர். நமனாச மெழுகில் வெள்ளைப் பாடாணம் சேர்ப்பது கருதிச் சேர்த்தனர் போலும் [கண்ணுசாமி பரம்பரை வைத்தியம் 202] கோரக்கரும் வெள்ளைப் பாடாணத்தை நவதசாமிர்த மெழுகில் சேர்த்துள்ளனர்.

13. அகத்தியர் விஷாமிர்த மெழுகில் முன்கூறிய பத்தில் கடுகுரோகணியும் திப்பிலியும் நீக்கிக் கந்தகமும் நவாச்சாரமும் சேர்த்துள்ளனர். [கண்ணுசாமி பரம்பரை வைத்தியம் பக்கம் 210].

14. கோரக்கர் நவதசாமிர்த மெழுகு செய்தார்,

15. போகர் 700-இல் சண்டமாருதக் குழம்பு விரிவாகச் சொன்னார்.

16. திருவள்ளுவர் ஞானவெட்டியானில் சண்டமாருதக் குழம்பு கூறினார்.

17. பிரமமுனி சண்டமாருதக் குழம்பு சுருக்கமாகச் சொன் னார். இக் குழப்புகளெல்லாம் அகத்தியர் குழம்பினைப் பின்பற்றி விரிவாகச் செய்த நன் மருந்து என்க.

18. யான், பூகி முனிவர் முறைப்படி செய்த அகத்தியர் குழம்பில் போகர் சண்ட மாருதக் குழம்பு அரைப்பதற்குக் கூறிய குழித்தைலம் விட்டு அரைத்துக் கொடுத்ததில் பயன்மிகுதியாக உண்டாயிற்று.

19. போகர் சண்டமாருதக் குழம்பிற்குக் கூறிய வெள்ளறுகு முதலிய ஏழுவகைப் பொருள் சேர்த்த கியாழத்தில் கலந்து கொடுக்க மேஹூறல் பற்றுப்படை விக்கம் புண் முதலியன நீங்கின,

20. கடுக்காய்க் கியாழத்தில் சிறிது கலந்து கொடுக்கக் கக்குவான் நீங்கிற்று.

21. வேப்பெண்ணெயிற் கலந்து கொடுக்கப் பற்றுக்கள், அரிப்பு, புண்கள் முதலியன நீங்கி, நஞ்சும் பழைய நஞ்சும் விலகின. இதனைக் கொடுத்த பின்பு கால பயிரவ எண்ணெய் கொடுத்தேன். உடல் முழுவதும் உள்ள கருப்பு ஆனைச் சொறி, புண் முதலியனவும் கரப்பான் கிரந்தி முதலிய கடிய நோய்களும் நீங்கின,

22. நோயாளிக்கு மருந்து கொடுக்கும்போது, இரண்டு மூன்று வேளை வயிறு கழிந்தவுடன் மோரும் சோறும் உண்ணும் வண்ணம் கட்டளையிடுவேன். களைப்பாக இருந்தால் மேற் கூறியவாறு உண்க என்று கூறினால் நலம். இந்த மருந்து வழங்குவதில் வருத்தம் ஏற்படாது.

23. யூகி முனிவர் தாம் இயற்றிய வாதகண்டம் முதல் ஆயிரத்தில் இந்த மருந்தைப்பற்றிக் கூறிய அறிவுரை மிகச் சிறந்தது, 23 முதல் 27 முடிய உள்ள ஐந்து பாடலின் கருத்தினை நோக்குவோம்.

நால்வகை உடற்கூறு அறிந்து மருந்து வழங்குக:-

1. வாதநோய்க்கு (வாத உடற்கூற்றினர்க்குத்) தேங்காய்ப் பாலில் வழங்குக; நலம் உண்டாகும்.
2. பித்த உடலினர்க்கு விளக்கெண்ணெயிற் கொடுக்க.
3. சிலேத்தும உடலினர்க்குச் சிவதைவேரும் கடுக்காயும் சேர்த்துக் காய்ச்சிய கியாழத்திற் கலந்து ஊட்டுக; அல்லது வெந்நீரிற் கொடுக்க.
4. தொந்த நோய் உடலினர்க்குக் கள்ளிப் பாலும் மோரும் கலந்து அதிற் குழம்பு சேர்த்து உண்பிக்க. அல்லது உழலாற்றிப்பட்டையும் (அத்திப் பட்டை) அமுரியும் கலந்து கியாழமிட்டுக் குழம்பு சேர்த்து அருந்தச் செய்க.

இங்ஙனம் கொடுக்காவிட்டால் வயித்தியங்கள் எல்லாம் பொய்யாம் என்கின்றார்.

''பொய்யென்று அகத்தியர்தான் குழம்பு தன்னைப்
போக்கோடே சொல்லாமல் ஒன்றாய்ச் சொன்னார்
மெய்யென்று நம்பாதே திரேகந் தன்னை
மெதுவான குறியறிந்து செய்ய வேணும்
வையென்று பேதிக்குப் பச்சை தன்னை
மறைத்துவைத்தார் என்றுமே மயங்கல் வேண்டாம்
கையென்ற உடலதுதான் ஊற்றக் கட்டை
கனமாக இதையறிந்து வயித்தியம் செய்யே''

என்ற பாடலில் பச்சையை மறைத்த குறிப்பினை உணர்க முட்டையின் மஞ்சட்கரு சேராவிட்டால் குழம்பு நாளடைவில் காய்ந்து எருட்போல் ஆகிவிடும்,

தவறாகப் பேதி மருந்து வழங்கினால் இரண்டுமுறை கழிச்சலானதால், ''காதடைத்துக் கண்ணுங்கெட்டுப் பொறிகலங்கி யுயிர்கள் போகும்''; வயித்தியர்கள் அறியாமல் கொடுத்துவிட்டு, ''சாத்திரங்கள் பொய்யோ என்று வலுமையாய் இருந்தழுது மாய்குவாரே'' என்று கூறுகின்றார். நாலுவகையுடலறிந்து கைபாகமாகச் செய்தால் ''நீடுழி வாழ்ந்துமே இருப்பாய்', என்கின்றார்.

24. யூகி முனிவர் வாத வைத்திய உலா ஆயிரத்தில் மேலும் கூறுகின்றார். அகத்தியர் கூறிய பச்சை என்பதற்கு நேர்வாளத்தில் பாதியை நன்றாய் வறுத்தும் பாதியை இளவறுப்பாய் வறுத்துப் பச்சையாகவே சேர்க்க வேண்டுமென்றார்.

பச்சை என்பதற்குத் துருசு சேர்த்து அரைத்துச் சிலர் கொடுக்க வாந்தியாயிற்று என்கிறார்.

25. இம்மருந்தினைப் பின்பாட்டுக்காரர் பாராட்டுகின்றார்.

''விதியாம் மருந்து இதுவல்லால்
வேறே தேட வேண்டாங்காண்
பதியாய் நாலாயிரத்து நானூறு
பகரும் வியாதி களுக்கெல்லாம்''

என்று கூறிப் பத்தியம் காக்கச் சொல்லுகின்றார்.

அகத்தியர், "நாமப்பா சொல்லுகின்றோம் பத்தியமில்லை" என்கின்றார். வயிறு கழிந்தபின் மோரும் சோறும் உண்ணலாமே பத்தியம் வேண்டியதில்லை,

யூகிமுனிவர்:

"ஆனசுக்குக் கியாழத்தி லிட்டிட
மனுவான ரோகம் அறுபத்திநாலுமே
வாகாக ஓடி ஒழிந்திடுங்காண்"

"தெள்ளு தமிழ்க்கலை சோதித் தகத்தீசர்
தீர்க்கமாய்க் கைபாகம் காட்டினர்காண்"

"அள்ளல்கள் எல்லாமும் தீர்ந்துவிடும் வெகு
ஆண்மைகள் உண்டாகும் மோனமிகும்"

என்றும் பாடினார்.

26. யான் முதன் முதலிற் செய்த மருந்து இதுவே. பின்னர் கால பயிரவ எண்ணெயும் செய்தேன். எத்துணை வகையோ நஞ்சும் நோயும் காய்ச்சலும் கக்குவானும் கொடிய இளைப்பும் காசமும் முதலிய பலப்பல நோய்கள் பறந்தோடின.

துணை மருந்தும் வழங்கும் முறையையும் காண்க,

நீர் என்பது - கியாழம் (வற்றக் காய்ச்சிய நீர்)

**துணைமருந்தும் நீங்கும் நோயும்:**

1. இஞ்சிச் சுரசம், சுக்குநீர் - குளிர்சுரம், சன்னி வாதசுரம், அண்டவாதம், வாய்வு, கீல் வாய்வு
2. கடுக்காய்த்தூள் - இருமல்
3. கடுக்காய் வெந்நீர் - பித்த சுரம்
4. திப்பிலி நீர் - சிலேத்தும சுரம்
5. கிராம்பு, மலைதாங்கி நீர் - பேதிச்சுரம்
6. சுக்குமிளகு நீர் - குளிர்சுரம்
7. ஆவின் நெய் - இரத்த மூலம்

8. ஆவின் பால் - பாண்டு
9. மிளகுத்தூள் வெள்ளுள்ளியில் - மகோதரம் பெருவயிறு நீராமை குன்மம்
10. தேன் இஞ்சிச் சாறு - சன்னி
11. சுக்கு நொச்சி நீர் - வாய்வு
12. சங்கங்குப்பிச்சாறு, மிளகு பொரிகாரம் கற்கண்டு இவற்றின் பொடியும் நெய்யும் கலந்த கூட்டு, வெள்ளரிப் பிஞ்சுச் சாறு, இளநீர், காடி - இவற்றில் ஏதேனும் ஒன்றிற் கொடுக்க நீர்க்கடுப்பு, நீர்ச்சிறுப்பு, கல்லடைப்பு
13. வெள்ளுள்ளித் தைலம் அல்லது வெள்ளுள்ளிக் கழற்சி முசுமுசுக்கை, இவற்றின் நீர் சன்னி 18
14. அரசங் கொழுந்தரைத்துக் கொட்டைப் பாக்களவு ஆவின் பாலிற் கலந்து 3 நாள் 3 வேளை கொடுக்க - கர்ப்ப நோய்
15. வெள்ளாட்டுப் பால் விட்டிடித்த நாவற்பட்டைச்சாறு சீரகப் பொடி - குதக வாய்வு, வாய்வுக் கட்டி.
16. நொச்சி வேர் பங்கம்பாளை வேர் சுக்குமிளகு இவற்றின் நீரில் - குதக வாய்வு, வாய்வுக் கட்டி.
17. இஞ்சி வெள்ளுள்ளி முருங்கைப் பட்டை எருக்கம் வேர், திருகுகள்ளி வேர், புன்கம் வேர் இவற்றைத் தட்டிப் பிழிந்த சுரச நீர் - உட்குத்து, புறவீச்சு.
18. கொடிவேலி, வேர்ப்பட்டைத்தூளும், கருப்புக்கட்டியும், சேர்த்துக் குப்பைமேனிச் சாற்றால் ஆட்டித் தேன்விட்டுக் குழைத்து அதில் வைத்து வழங்க - நெஞ்சு வலி.
19. வில்வம், லவங்கப் பத்திரி கிராம்பு, அதிமதுரம். தாளிசப் பத்திரி நீர், வெண்ணெய் - நெஞ்சு வலி.
20. தாளியிலை, அவுரியிலை. அரைத்துக் கொட்டைப் பாக்களவு எடுத்து வெண்ணெய் சேர்த்து - விரியன் கடி நஞ்சு.
21. நவ்வற்கொழுந்து மிளகு வெற்றிலையரைத்துக் கொட்டைப் பாக்களவில் - நல்லரவின் நஞ்சு.
22. சுருள்ளிச் சாற்றில் உள்ளுக்குக் கொடுத்து மேலும் தடவ - தேள்கடி நஞ்சு.

23. வெல்லமும் புகையூறலும் பேய்ப்பீர்க்கன்வித்தும் மேனிச் சாற்றில் அரைத்ததில் கொட்டைப் பாக்களவில் - வழலைக் கடி.

24. நொச்சிச் சுரசமும், திரிகடுகுப் பொடியும் - வீக்கம் விசபாக வீக்கம்.

25. காடியில் - சத்திப்பு

26. ஆவின் பால் அல்லது வெள்ளாட்டுப் பாலில் - மூல நோயால் சீதம் விழுதல், கெர்ப்பவிப்புருதி கெர்ப்ப நோய்.

27, ஆவின் நெய் - இரத்த மூலம்.

28. அகத்தியிலைச்சாறு - மகோதரமும் வெட்டையும்.

29. ஆமணக்கெண்ணெய் - வாயுத்திரட்சி.

30. தேங்காய்ப்பாலில் - கழல் வாதம்.

31. கருப்புக் கட்டியில் - ஆனந்த வாய்வும் சுரமும்.

32. ஆவின் பாலில் - பித்தம்

33. பஞ்சமூலக் கோதிநீர் - சன்னி 13

34. இஞ்சிச் சுரசம் - குன்மம் 8

35. வெல்லத்தில் - தாபசுரம்

36. நொச்சிச் சாற்றில் - வாதசுரம்

37. கொத்தமல்லிக் கொதிநீரில் - பித்தசுரம்

38. திப்பிலிநீர் - நடுக்கல் ஐயசுரம்

39. வெள்ளாட்டுத் தயிரில் - வயிற்றுக் கடுப்பு

40. கருப்புக்கட்டியில் - சூலை பதினெட்டும் கிரந்தியும்

41. ஆவின் தயிரில் - சூதக வாய்வு

42, விலாமிச்ச வேர்க் கியாழத்தில் - பித்தவெட்டை

43. செம்மறியாட்டுப் பால் அல்லது சாம்பிராணித் தைலம் - திரளாந பெண் திரளும் [9 நாள் கொடுக்க]

44. திரிகடுகில் - பல நோய்

45. வெற்றிலைச் சாற்றில் - நஞ்சு

46, சாதிக்காய்ப் பொடியில் - அதிசாரசுரம்

47. நல்லெண்ணெயில் குழைத்திட - ரணம் நீங்கும்

48. வேப்பெண்ணெய் நல்லெண்ணெய் இவற்றில் குழைத்திட - ஆறாப்புண் ஆறும்

49. உமிழ் நீரிலாவது தேனிலாவது குழைத்திட - சிலந்தி, அரையாப்பு, பிளவை, புற்று

50. முலைப்பாலில் கலந்து நாசியில் நசியமிட - தலையிடி நீங்கும்

51. முலைப்பாலில் கலந்து பூச நெறிக்கட்டு நீங்கும்

52. கடுகின் அளவு முலைப்பாலில் கலந்து கண்ணில் போட - மரத்திலிருந்து விழுந்து மயங்கின மயக்கம், தண்ணீரில் விழ்ந்து மயங்கின மயக்கம்.

53. துணியில் தடவிப் புகைபிடிக்க - முகவாதச் சன்னி பற்கட்டு விஷக்கடி, கபால வலி, பேய், பிசாசு நீங்கும்.

54. வேப்பெண்ணெயிலாவது, சுக்குக்கியாழத்திலாவது எள்ளளவு உரைத்துக் கண்ணிலிட சன்னி நீங்கும். கண் வீங்கி வேதனை கண்டால் சுடுசோறும், தயிரும் மத்தித்துக் கண்ணிற்கட்ட நீங்கும் [பிள்ளைப் பாலும் கண்ணில் விடலாம்] வயிற்றுக் கழிச்சலும் இருந்தால் - வசம்பைச் சுட்ட கரியைத் தேனில் உரைத்துக் கொடுத்தாலும் முருங்கை யீர்க்குக் கியாழம் கொடுத்தாலும் எலுமிச்சம்பழச்சாறு கொடுத்தாலும் ஆவின்பால், மோர், காடி இவற்றில் ஒன்றைக் குழைத் தாலும் கழிச்சல் நிற்கும்.

குறிப்பு:- கழிச்சல் மிகுவது போல் காணப்பட்டவுடனும் களைப்புத் தோன்றியவுடனும், மோரும் சோறும் உண்ண முதலிலேயே கூறிவிடுக. இம்மருந்தின் துணை மருந்து இன்னும் விரிக்கிற் பெருகும். யோகஞானம் சாத்திரத் திரட்டிலும, கௌசிகர் குழம்பிலும், யூகி முனிவர் கும்மியிலும் காண்க.

# தன்வந்திரி - வைத்திய காவியம் 1000

## கந்தசாமி முதலியார் - 1888

(பக்கம் 1)

1. காணவே குழம்பொன்று வுரைப்பேன் கேளீர்
கருவான வாளமது பலமோ பத்து
தோணவே லிங்கமது பலமோ வொன்று
துணிவான பூரமது பலமோ வொன்று
யிணவே வங்காரம் பலமோ வொன்று
யியலான கடுக்காய்த்தோல் பலமு மொன்று
மாணவே வெடியுப்புப் பலமோ வொன்று
மறைப்பான முப்பூவும் பலமொன் றாமே.

2. ஒன்றான பத்திரியுங் கால தாக
உயர்வான சுக்கதுவும் அரைய தாக
நன்றான வாய்விளங்கம் கால தாக
நயமான வாகையது சமன தாகக்
குன்றான ரோகிணியுங் கால தாகக்
குறிப்பான திப்பிலியும் அரைய தாகப்
பன்றாகப் பொடித்துமே சூர ணித்தும்
பாங்காக முக்கண்ணன் பாலா லாட்டே.

3. ஆட்டியே அறுபது சாம மாட்டு
அழகான சிமிழ்தனிலே பதனம் பண்ணு
பூட்டியே ரேசகபூ ரகமுஞ் செய்து
பொலிவான வாலைக்குத் தூப தீபம்
மாட்டியே கும்பித்து வணங்கி நின்று
மகிட்சிபெற நாதாக்கள் பாதம் போற்றித்
தீட்டியே மூன்றுநாள் கொண்டா யானால்
தெளிவான வாதபித்தங் கழன்று போமே.

4. போமேதான் பேதியது அதிகங் கண்டால்
பொல்லாத வசம்பதனைத் தட்டிக் காய்ச்சு
நாமேதான் சொன்னபடி கொடுத்தா யானால்
நவிலவொண்ணா பேதியது யடங்கிக் கட்டும்
ஆமேதான் இக்குழம்பு யாருஞ் சொல்லார்
அடைவாக மாந்தருக்கு எளிதாய்ச்
சொன்னோம்
போமேதான் இன்னமொரு பேதி சொல்வேன்
புகழ்ச்சியாய் எடுத்துரைப்பேன் கேளு கேளு.

# வைத்திய மூலிகை அகராதி

## கந்தசாமி முதலியார் 1924

### அகத்தியர் குழம்பு

(பக்கம் 2)

''பேசிய மருந்து கேளாய்
பெருங்காயங் கடுகிந் துப்பு
விசிய ரசம்வெங் காரம்
விடிமனோ சிலையு மோமம்
ஆசிலா வரிதா ரத்தோ
டருங்கருஞ் சீர கந்தான்
மாசிலா மருந்தே பார்த்து
வகைவகைக் கழஞ்சு வாங்கே.''

''வாங்கிய கழஞ்சுக் கொப்பாய்
வாளமும் வறுத்துப் பாதி
தாங்கிய பச்சை பாதி
சமன்முளை போக்கி நீக்கித்
தீங்கிலா மருந்து பத்துந்
தீர்க்கமா யரைக்கக் காந்தும்
ஒங்கிய மோருஞ் சோறு
முண்டுநீ யரைத்துக் கூட்டே-''

**அனுபானம்:**

சுரத்துக்குச் சுக்கு, இருமலுக்குக் கடுக்காய்ச் சாறு, குளிர் சுரங்களுக்குச் சுக்கு, மிளகு, இரத்த மூலத்துக்குப் பசுவின் வெண்ணெய், எருமைப்பால், பாண்டு, மகோதரம், பெருவயிறு, நீராமை, சோகைக்கு மிளகுத்தூள், வெள் வெங்காயம். எல்லாவித சன்னிகட்கும் தேன், இஞ்சிச்சாறு, விஷ சன்னிக்கு எருக்கில் வேரில், கடுகிற் பாதி எடுத்து அரைத்துக் கண்ணிலிடவேண்டியது (இந்தப் பிரயோகம் அபாயமானதென்று நினைக்கின்றேன். எப்படியெனில் கூடலூரில் ஒருவனுக்கும் சிற்றூரில் ஒருவனுக்கும் வைத்தியர் எருக்கம்பாலில் அகத்தியர் குழம்பைக் கட்டிக் கண்களிலிடக் கண்களவிந்து போயின. இது யான் நேரில்

கண்டது. இப்படிப்பட்ட உக்கிரமான மருந்துகளைப் பிரயோகம் பண்ணுகிற வைத்தியனுக்கு அதிக விவேகமிருக்க வேண்டும். மற்றைப் பிரயோகங்களிலும் அதிக எச்சரிக்கையும் வேண்டும்: கண் வீங்கினால் கற்றாழைச் சோற்றை வடிகட்டிய தயிர், சந்தனம் இவைகளோடு சேர்த்துக் கட்டவேண்டும். பரு, பிளவைவாழை, அரையாப்பு, புண்கள், சிலந்தி இவைகட்கு உமிழ்நீரிலிழைத்துப் பூச வேண்டும். முலைக்குத்துக்குப் பிண்ணாக்கு, மேற்படி அனுபானத்தில் தானே கொடுக்கலாம். சூசிகாவாதம், சூலை, குட்டம் இவைகட்கு நொச்சிச் சாற்றில் கொடுக்கலாம். பலவித குணங்களையுடைய பலவித வாய்வுகளுக்கெல்லாம் நொச்சி சுக்கு இவைகளோடு சேர்த்துக் கொடுக்க வேண்டும்.

கபால வலிக்குக் குழம்பூட்டிய திரிப்புகையூட்ட வேண்டும். நீர்ச்சிறுப்பு, நீர்க்கல்லடைப்பு இவைகட்குத் தாழைவிழுது சேர்க்க வேண்டும்.

தீராத வாதம், விஷம் இவைகட்குக் குப்பிச் சாறூட்டிய திரிப்புகையூட்ட வேண்டும்.

**குழம்பு ஊட்டித் திரி செய்ய வேண்டிய விதம்:**

குழம்பு அரைத்த அம்மியில் சலவையாயிருக்கிற பழைய வஸ்திரத்தைப் புரட்டி உருட்டித் திரிசெய்தல்.

புகைப்பிடித்தால்—தலையிடி தலைகாட்டாமலோடும்.

பதினெட்டுச் சன்னிகட்கு நூல்விதியின்படி அனுபானம் ஏதோவெனில், வெங்காயம், கழற்சிக்கொடி, முசுமுசுக்கை, நொச்சி இவைகளேயாம். இதனால் நாலாயிரத்து நானூறு வியாதிகளுந் தீரும். வகையறிந்து அனுபானஞ் செய்யவேண்டும்.

ஸ்திரீகட்குக் கர்ப்பம் வருவதற்கு அரசங்கொழுந்தை ஆவின் பாலில் விட்டரைத்துக் கொடுக்கக் குழம்பில் ஒரு பணவெடை எடுத்து மாதவிடாயின் மூன்று நாளும் கொடுக்க வேண்டும். புதல்வருண்டாவார்.

சூதகவாயுவுக்கு நாவற்பட்டை, வெள்ளாட்டுப் பால் இவைகளைக் கூட்டிச் சுரசஞ் செய்து, அதில் சீரகப் பொடியைக் கூட்டிக் குழம்பில் ஒரு பணவெடை குழைத்துக் கொண்டால் சூதகவாயு தீரும்.

பித்த பிரமியத்துக்கு - நொச்சிச் சாற்றில் சாரணை வேர், மிளகு, சுக்குச் சேர்த்துக் குழம்பில் ஓர் பணவெடை கூட்டிக் கொடுக்க வேண்டும்.

பிறவிச்சுக்கு - உள்ளி, முருங்கைப் பட்டை, புன்கு, எருக்கம் வேர், அரிதாரம், திருகு கள்ளி, இஞ்சிச் சுரசம், இதில் ஒரு பணவெடை சேர்த்துக் கொடுக்க வேண்டும்.

நெஞ்சுவலிக்கு - இலவங்கப் பட்டை, கிராம்பு, அதிமதுரம், தாளிசப் பத்திரி, இவைகளை ஆவின் வெண்ணெயில் பணவெடை யிட்டு இழைத்துக் கொடுத்தால் நெஞ்சுவலி தீரும்.

நாகப் பாம்பு கடி விஷத்துக்கு - நாவற் கொழுந்து, மிளகு இரண்டு வராகனெடை வெற்றிலைச் சாற்றில் குழம்பில் மூன்று பணவெடை சேர்த்துக் கொடுக்க வேண்டும். நாகப் பாம்பு விஷந்தீரும்.

தேளின் விஷத்துக்கு - எருக்கந் துளிரிலையில் குழம்பில் ஒரு பணவெடை சேர்த்துக் கொடுக்க வேண்டும். உமிழ்நீரில் இழைத்துக் கடிவாயில் பூச வேண்டும்.

வழலைக் கடிக்கு - மிளகு, பேய்ப்பீர்க்கு இவைகளை நன்றாய்க் குப்பைமேனியின் சாற்றில் அரைத்துக் குழம்பில் பணவெடை கொடுக்கில் வழலை விஷந்தீரும்,

நீர்க்கட்டுக்கு - மிளகு, பொரிகாரம் இவ்விரண்டையும் நன் றாய்ப் பொரித்துக் கற்கண்டு பொடி செய்து அவைகளை இரண்டு வராகனெடை ஆவின் நெய்யில் ஒரு பணவெடைக் குழம்பு இழைத்துக் கொடுக்கப் பிணி தீரும்.

விஷ பாண்டுக்கு - வீக்கந் தீர நொச்சிச் சாறு, சுக்கு, திப்பிலி, மிளகு கூட்டிக் குழம்பில் ஒரு பணவெடை சேர்த்துக்கொடுத் தால் வீக்கந்தீரும். இந்தப்படி குழம்பைக் கொடுப்பதில் அதிக பேதியானால் மதி மயங்காமல் அடுப்பில் சட்டிவைத்து வசம்பைத் தட்டிப்போட்டு நீர்விட்டுக் காய்ச்சி ஆவின் வெண்ணெய் போட்டுச் சுருக்கில் கொடுத்தால் தீராப் பேதியெல்லாந் தீரும்.

## யூகிமுனி கும்மி - 1000

பதிப்பாசிரியர்: குரு. இராமசாமிக்கோன், 1936

### அகத்தியர் குழம்பு

(பக்கம் 44 - 46)

பேதிக் குழம்பதை அகத்தீசர் நன்றாய்ப்
பேதமில் லாமலே சொல்லி வைத்தார்
போதினைக் கைப்பாகம் சொல்லுகி றேன்நல்ல
புதுமை யாமடி ஞானப்பெண்ணே. (300)

ஆனந்த மான பெருங்காய மதில்
அத்வைத மாகிய ரோகணியும்
தானந்த யிந்துப்பி ரதமுடன் காரம்
தார மனோசிலை திப்பிலியும் (301)

வானந்த மான கருஞ்சீர கமுடன்
வாகாகச் சுக்கு முடன்சேர்த்து
மோனந்த மாயிடை ஒன்றுக்கு ஒன்றதரய்
முந்திய பச்சையதாய் நிறுத்து (302)

நிறுத்த யிடைக்கிடை தான்வா ளங்கரி
நிச்சய மாகக் கருக்கிக்கொண்டு
கருத்த முன்சரக் கத்தனை யும்போட்டுக்
காதலா யாவின்மோர் விட்டரைத்து (303)

அரைக்க வாளத்தின் பித்த மெடுபடும்
அன்பாக வாந்தியும் பண்ணாது
நிரைத்த சாமமி ரண்டுமே தானரை
நிட்சய மாகக்கொடுக்க வுங்கேள் (304)

### குழம்பு அனுபானம்

அனுப்பா னத்தையுஞ் சொல்லுகி றேனுயர்
ஆனசுக் குக்கியா ழத்திலிட
மனுவான ரோக மறுபத்தி னாலுமே
வாகாக ஓடியொ ழிந்திடுங்காண் (305)

கடுக்காய் வெந்நீரில் தானிட வுங்கேளு
காச மிருமலுந் தான்போகும்
அடுக்க மிளகு கியாழத்தி லிட்டிட
அலுத்துப் போகும் வெகுசுரமே (306)

நெய்யினி லிட்டிட மூலம் பதினைந்தும்
நேர்மைய தாக ஒழிந்தோடும்
கையில் மிளகுக் கியாழத்தி லிட்டிடக்
கரிய மகோதர உப்பிசமும் (307)

வையகந் தன்னிலே நில்லாம லோடிடும்
வண்மையு மாகு மடிமயிலே
செய்யவே இம்முறை கைப்பாக மாகவே
செய்து முடித்தால் வியாதியறும் (308)

இஞ்சி பிழிந்து அதனிலிட் டாற்கேளு
இன்பமாய்ச் சன்னி முறிந்துவிடும்
அஞ்சித் திரிந்தாலே பச்சை பச்சையென்ற
தாகுங் குழம்பு வலுவாமே (309)

கரங்கு வேப்பெண்ணை தன்னிலே இட்டிட
கண்ட சன்னியோடும் ஞானப்பெண்ணே
சிரங்கு புண்புரை தன்னில் தடவிடச்
சீக்கிர மாகவே ஆறிவிடும் (319)

வெள்ளை மிளகுக் கியாழத்தி லிட்டிட
விட்ட குறைவலி குன்மம்போகும்
தெள்ளு தமிழ்க்கலை சோதித் தகத்தீசர்
தீர்க்கமாய்க் கைபாகங் காட்டினர்காண் (311)

அள்ளல்க ளெல்லாமுந் தீர்ந்து விடும்வெகு
ஆண்மைக ளுண்டாகும் மோனமிகும்
உள்ளதோ ரானந்தக் கும்மி யிதுதனில்
உற்றது சொன்னேனே ஞானப்பெண்ணே (312)

இந்தக்குழம்பு தனைக்கொடுத் தேவாய்வு
இன்பமாய்ப் போக்கிச் சரீரந்தன்னில்
சிந்தைய தாக அயக்கற்ப முண்டிடச்
செல்வமுங் காயம் நிலைக்குமடி (313)

நிலைக்க வேஅய கற்பஞ்சொல் வேனிதை
நிர்ணய மாகவே உண்டுதேறு
வலைக்கு ளகப்பட்ட மானைப்போ லேநோய்
மறுகி யோடுமே ஞானப்பெண்ணே. (314)

# அகத்தியர் அமுத கலைஞானம் 1200

ஆசிரியர்: சண்முக முதலியார்,

சரவணபுரம். வெகுதானிய வருஷம்

## அகத்தியர் குழம்பு

(பக்கம் 219)

900) உண்மையாய் நம்முடைய குழம்பைக் கேளு
உறுதியுள்ள பெருங்காய மிந்துப் போடு
தன்மையுள்ள கடுகுரோ கணியுங் கூட்டித்
தயவான ரசமுடனே காரங் கூட்டி
நன்மையுள்ள நிருவிசமுஞ் சிலையுந் தாரம்
நல்லகருஞ் சீரகந்திப் பிலியுஞ் சேர்த்து
வண்மையுடன் துகைபார்க்கப் பத்து மாச்சு
வரிசையுடன் சரியிடையாய் வாங்கிக்
கொள்ளே

901) வாங்கியதோர் மருந்துக்கு இடைதான் வாளம்
வளமாக அதுக்கரைதான் பச்சை சேர்த்துப்
பாங்குடனே கல்வத்தி லிட்டுக் கொண்டு
பக்குவமா யிராறு சாம மாட்டித்
திங்கிலா முப்பூவும் பத்துக் கொன்று
சேர்த்துநி திரமாகச் சாம மாட்டு
சாங்கமாய் மருந்தரைக்கும் போதில் மைந்தா
தயிருடனே சோறுண்டு தயவா யாட்டே,

902) ஆட்டிநன்றாய் வழித்தெடுத்து மேதிக் கொம்பு
அடைவான சிமிழதனில் பதனம் பண்ணி
நாட்டிலே மானிடர்க்கு வருநோய்க் கெல்லாம்
நலமான அனுபான மறிந்து செய்தால்
வாட்டமுட னோடிவிடு மைந்தா கேளு
மகத்தான வித்தையடா குழம்பின் மார்க்கந்
தேட்டிலே யிக்குழம்பைத் தேடிக்கொண்டு
சிவசிவா நம்முடைய பேர்வைத் தாரே.

903) பேர்வைத்தா ரேன்றால் மைந்தா கேளு
பெருமையுள்ள சித்தர்தபோ தனர்கள் கூடி
தேர்வைத்த மருந்துறுதி குறிப்பைக் கண்டு
நேர்மையுள்ள அகத்தீசர் குழம்பேன் றார்கள்
பார்வைத்த அகத்திசர் பண்பறிந்தால் மைந்தா
பகரினதோர் குழம்புறுதி அறிவா னப்பா
கூர்வைத்த குழம்புறுதி யென்ன வென்றால்
குணமான பரிச்சையடர உயிரு மாச்சே.

904) உயிரான பச்சதைனை யறிந்து கொண்டு
உண்மையாய் நம்முடைய குழம்பு பண்ணிப்
பயிரான மானிடர்க்கு வருநோய் கண்டு
பாச்சுகிற விதமுனக்குப் பகரு வேன்கேள்
துயரான லோகருக்குச் சுரங்கள் கண்டால்
சுகமாக இஞ்சியைநீ சுரசம் பண்ணி
வயிரான குழம்பில்கால் பணவிடைதான் கரைத்து
வரிசையாய்க் கொடுத்தவுடன் பேதி யப்மே.

905) ஆமப்பா பேதித்த போதில் மைந்தா
அணுகிநின்ற சுரமனைத்து மகன்று போகும்
தாமப்பா சோறுபொங்கி வெந்நீர் விட்டுத்
தாகமது தானடங்கக் குடிக்கச் சொல்லு
நாமப்பா சொல்லுகிறோம் பத்திய மில்லை
நன்மையில்லா தோஷமது நாடிற் றானால்
போமப்பா கடுகளவு கண்ணிற் போட்டுப்
புரிசமுட நாவினிலே தீற்று வாயே.

906) தீற்றிநன்றாய்க் கண்ணிலிட்டால் முழித்துப்
பார்ப்பான்
திரமான நாவரட்சி விட்டுப் போகும்
பார்த்துநன்றாய்ப் பரிசுடனே பிணிய றிந்து
பருவமுடன் செய்துவந்தால் பலனா மைந்தா
கார்த்துமிகக் கருவறிந்து குணத்தைக் கண்டு
காலறிந்து மேலறிந்து கர்மம் போக்கிப்
போற்றிநன்றாய் மருந்துமிகச் செய்தா யானால்
பூலோக ராஜரிஷி யாவாய் பாரே.

907) பாரப்பா பிளவைமுத லேழு நோய்க்குப்
பண்பாக வுமிழ்நீரால் குழைத்துப் பூசு
நேரப்பா வீரமெல்லாந் திரும் திரும்
நேர்மையுடன் புரைமுதலாய்ப் புண்கள் திரும்
காரப்பா விஷமனைத்தும் போக வென்றால்
கடுகளவு கண்ணிலிடக் காணா தோடும்
சாரப்பா விரியனுக்குச் சிறுபாகைச் சாற்றில்
தன்மையுடன் குழைத்துக் கண்ணில் தீற்றே.

908) தீற்றியே கடிவாயில் பூசிப் பாரு
செம்மையுடன் விஷந்திருந் திரந்தா னப்பா
போற்றியே சிலவிஷங்க ளனைத்தும் போகப்
புதுமையுடன் சிறுநீரைச் சிறுக வாங்கிப்
பார்த்துமே கடுகளவு கரைத்துக் கொண்டால்
பறக்குமடா சிலவிஷங்க ளைந்து மைந்தா
காத்துமே வயித்தியமா யிரத்தில் மைந்தா
கருவாக வயித்தியத்திற் கருதி னேனே.

வைத்தியத் திருப்புகழ்
டாக்டர் இரா. தியாகராசன்
இரண்டாம் பதிப்பு 1975
சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு; சென்னை.

அகத்தியர் குழம்பு

(பக்கம் 35)

தனன தந்ததன தனன தந்ததன
தனன தந்ததன தனதான

கடுகொ டண்டுதக டரித ரங்கணமு
மிரத வெங்கணமும் விடநாபி
கடிய விந்துலவ ணுடபெ ருங்காயமும்
கருசி ரங்கமனோ சிலைதானும்

கொடும ருந்துவகை படிக மஞ்சியொடு
கொடிவ ளம்படிவை சமனாக
குறிம டங்கவிட மெலையெ டுங்கனலி
வறுநொ ருங்கவிடி யரைத்தாடாய்

இடது டங்குகட முடன டிங்கிமல
மிடுதி டண்டலறி வளியாட
விடிமு மூங்கியுடல் படப டென்றுவரு
மிரிக ளண்டுமவ கடசானும்

நடுந டுங்கிபல நலிம டங்குசக
நறும லங்களழி பலநோய்க்கும்
நறும ருந்துகுறு முனிகு ழம்புபெயர்
நலவ ருந்துமுறை மனுவோர்க்கே.

மஞ்சள் கடுக்காய்த்தோல், கடுகுரோகணி, அரிசித்திப்பிலி, தூய்தாக்கிய கருநாபி, கருஞ்சீரகம், கடுகு, பொரித்த பெருங்காயம், தூய்தாக்கிய மடலரிதாரம், தூய்தாக்கிய மனோசிலை இவை வகைக்கு வராகன் எடை —1; தூய்தாக்கிய நேர்வாளப் பருப்பு வராகன் எடை-12; பனைவெல்லம் வராகன் எடை-24; கொட்டாங் கச்சிக்கரி வராகன் எடை-4; உத்தாமணிச்சாறு செல்லத்தக்க அளவு தேங்காயின் தனிப்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை: தாளகத்தைக் கல்வத்திலிட்டு நுண்மையாகப் பொடித்து, இரசத்தையும் மனோசிலையையும் சேர்த்து அரைக்க வேண்டும். இரசம் மடிந்த பின்பு மற்றச் சரக்குகளையும் சேர்த்து ஒரு மணிநேரம் அரைத்து எல்லாம் நன்றாகக் கலந்த பின்பு உத்தாமணிச்சாற்றைச் சிறிது எடுத்து அதிற் பனைவெல்லத்தைக் குழம்புப் பதமாகக் கரைத்து மேற்படி மருந்தில் சிறுகச்சிறுக வார்த்துக் கைவிடாமல் 12 மணிநேரமரைக்க வேண்டும். பனை வெல்லம் கரைத்த குழம்பெல்லாம் செலவாகிவிட்டால் உத்தா மணித் தனிச்சாற்றைவிட்டு அரைக்க வேண்டும். இவ்வாறு 12 மணிநேரம் அரைத்த பின்பு தேங்காய்ப்பாலைச் சிறுகச்சிறுக வார்த்து 12 மணிநேரம் கைவிடாமல் அரைக்க வேண்டும். இவ்வாறு 12 மணிநேரம் அரைத்த பின்பு மெழுகைப்போலக் கெட்டிப் பதமாகிற வரையில் நீர்மம் விடாமல் அரைத்துக் கண்ணாடிச்சிமிழில் (அல்லது) தந்தச்சிமிழில் காப்புச் செய்யவும்.

அளவு: குன்றிமணி எடை $\frac{1}{4}$ — $\frac{1}{2}$ காலத்துக்கேற்றவாறு தகுந்த துணைமருந்துகளில் பயன்படுத்த வேண்டும். இதன் துணைமருந்து முறைகள் பல நூல்களில் சொல்லப்பட்டிருப்பதாலும், இம்மருந்து பல மருத்துவர்களால் வழக்கமாகச் செயற்படுத்தப்பட்டு வருகிறபடியாலும் இங்கு சுருக்கமாகக் கூறி முடித்தோம். இதன் முறையை ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையாகச் செய்கின்றார் களாயினும் மூலத்திற்கண்டவாறு இங்கெழுதப்பட்டுள்ளது.

தீரும்நோய்கள்: பதின்மூன்றுவகைச் சன்னிகள், அனைத்து வகைப் பாம்பு நஞ்சுகள், பேய் நாய் நஞ்சு, ஓநாய்க்கடி நஞ்சு, பதினெட்டுவகை எலிக்கடி நஞ்சு, கை கால் விக்கம், வயிற்றிலுள்ள அனைத்து நோய்கள் ஆகியன தீரும். சுருங்கக்கூறின், இதனைத்

தகுந்த துணைமருந்துகளில் பயன்படுத்தினால் எண்பது வகை வாத நோய். நாற்பது வகைப் பித்தநோய், இருபதுவகை ஈளை நோய் ஆகியன தீரும்.

**மருந்துணவு:** பிணிக்குத் தகுந்தவாறும் உடலியல்புக்குத் தகுந்தவாறும் முடிவுகட்டி மருந்துணவை ஏற்படுத்த வேண்டியதே முதன்மையானதாம்.

**குறிப்பு:** இம்மருந்தில் நேர்வாளம் சேர்ந்திருப்பதால் மென்மையான உடலினர்க்குப் பெரிதும் பொருந்தாது. ஆகையால் மருத்துவர்கள் இவ்வகை மருந்துகளை மிகவும் விழிப்புணர்ச்சி யுடனும், எச்சரிக்கையுடனும் பயன்படுத்த வேண்டும்.

### மனோசிலை சுத்தி

மனோசிலை 2 பலம் (70 கிராம்), பெண் வெள்ளாட்டு மூத்திரம் படி $1\frac{1}{4}$. மனோசிலையைச் சிறுசிறு துண்டுகளாக மெல்லிய துணியில் தளர்ச்சியாக முடிந்து முன்கூறிய மூத்திரத்தை ஒரு மண் கலத்தில் விட்டுத் துணி முடிச்சைக் கிழியாகக் கட்டி மூத்திரத்துக் குள் பானையினடியில் படாமல் தொங்கவிட்டு அடுப்பின் மீதேற்றி யெரித்து மூத்திரம் சுண்டினபின் ஆறவிட்டு இறக்கித் தூயநீர் விட்டுக் கழுவியெடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து மேற்படி ஆட்டின் பித்தநீரைச் சிறுகச்சிறுக விட்டு 3 மணிநேர மரைத்துச் சிறு வில்லைகளாகச் செய்து வெய்யிலிலுலர்த்திக் கொள்ள வேண்டும். நன்றாக வுலர்ந்தபின்பு கல்வத்திலிட்டுப் பொடித்து மீண்டும் பித்தநீரைச் சிறுகச்சிறுக விட்டு முன்போ லரைத்து முன்போ லுலர்த்திக் கொள்ளவேண்டும். இவ்வாறு மடக்கி மடக்கி ஏழுதடவை பித்தநீரில் அரைத்துலர்த்திக் கொண்டால் அது மிகவும் திறமையான தூய்மையாகும். இதனைத்தனியாகவே எல்லா நோய்களிலும் பயன்படுத்தலாம்.

இவ்வாறு செய்ய இயலாதவர்கள் மேற்கூறிய மூத்திரத்தில் மட்டும் தூயதாக்கிக் கொள்ளலாம். இது அகப்படாவிட்டால் மிளகு கியாழத்தில் மேற்கண்டவாறு எரித்தெடுத்துக் கொள்ளலாம்.

நோய்களுக்குச் சித்தப் பரிகாரம்

முதல் பாகம்

டாக்டர் ம. சண்முகவேலு, 1972

(பக்கம் 334 - 339)

பதினெண் சித்தர் வைத்திய மூலிகை விரிவகராதி

## அகத்தியர் குழம்பு

செய்யுள்

1) ''பேசிய மருந்து கேளாய்
பெருங்காயம் கடுகிந் துப்பு
வீசிய ரசம்வெண் காரம்
விடமனோ சிலையு மோமம்
ஆசிலா வரிதா ரத்தோ
டருங்கருஞ் சீர கந்தான்
மாசிலா மருந்தே பார்த்து
வகைவகைக் கழஞ்சு வாங்கே.''

2) ''வாங்கிய கழஞ்சுக் கொப்ப
வாளமும் வறுத்துப் பாதி
தாங்கிய பச்சை பாதி
சமன்முளை பாதி போக்கித்
தீங்கிலா மருந்து பத்துந்
தீர்க்கமா யரைக்கக் காந்தும்
ஓங்கிய மோருஞ் சோறு
முண்டுநீ யரைத்துக் கூட்டே.''

(EXPLANATION)

R/

Perungayam

Katuku roghani

Rasam

Vengaram (fried)

Nabhi

Manosilai

Omam

Thazhakam

Karunjeerakam-all 1 kazhanju

Nervalam (purified) equal to the above total Weight i.e, 10 kazhanjus. In this formula, thippili is omitted and omam is substituted. The other particulars are as described already. In this connection I wish to point out that as far as my knowledge goes, the above verses are definitely reproduced (copied) from Agastiar Soothiram, which is said to contain the original recipe of Agastiar Kuzhambu. Probably subsequent editors made mistakes in the verses borrowed and copied from the original work Agastiar Soothiram with varied interpretations. Agastiar Soothiram containing the original recipe of Agastiar Kuzhambu, I have not come across as yet.

But in the course of my research study of very old works in cudjen leaves I have come across the following Agastiar works, which gives a thorough revolutionised recipe for Agastiar Kuzhambu. It is only from the following stanzas we infer that Agastiar Soothiram with reservation of a particular secret namely a herb employed in the process of Agastiar Kuzhambu. This secret has now been exposed and the actual formula of Agastiar Kuzhambu is only as follows and nothing else. I am contributing this most important new recipe of Agastiar Kuzhambu with my firm conviction and hope that every one will be pleased to prepare this specific, make a fair trial in their practice, and offer their remark about this new formula.

அகஸ்தியர் நூல் (Probably Agastiar Soothiram)

## அகஸ்தியர் குழம்பு (ஏட்டுப்பிரதி)

1) துலைந்துபோம் நோய்களெல்லாம் போவ தற்குத்
துடியான புலத்தியனே குழம்பு கேளு
அலைந்துபோம் என்னுடைய குழம்பு தன்னை
அடைவாகச் சூத்திரத்தில் மறைத்துப்
போட்டேன்
குலைந்துபோ மென்றுசொல்லி யின்னூல் தன்னில்
குறிப்பாகச் சொல்லிவிட்டேன் கூர்ந்து பாரு
நலைந்துநீ யிக்குழம்பை வைத்துக் கொண்டு
நலமாகப் பிணிபலவும் தீர்த்தி டாயே.

2) தீர்த்திடவே நங்கூரங்கள் போட்டாற் போலே
தீர்த்திடவே என்னுடைய குழம்பு மார்க்கம்
பார்த்திடவே பரமசிவ னுரைத்த பாகம்
பதிவாக உங்களுக்குப் பரிந்து சொன்னேன்
நாத்திடவே நெல்விளைந்த சீமை போலே
நலமாகத் திருமது பிணியின் மார்க்கம்
மெய்த்திடவே சகலபிணிக் கெல்லாமென் னுடைய
மேலான குழம்புஒன்று சொல்லுகிறேன் பாரே.

3) பாருநீ மறைத்ததொரு பச்சை தன்னைப்
பரிவாக இந்நூல் தன்னிலே தான்
சேருநீ சொல்லுகிறேன் குழம்பென் றக்கால்
ஜெயமாகக் குழம்பென்று ரைக்க வேணும்
காருநீ காய்ந்தாலே கலமு மில்லை
கனிவாகப் பிணிபலவும் போகா தப்பா
சாருமே பச்சையது என்ன வென்றால்
சரியான நிம்பப்பத்திரிச் சாற்றில் பாரே.

4) சாதிக்க நிம்பயிலை ரொம்ப வாங்கிச்
சரியாக அரிவாளால் நறுக்கிக் கொண்டு
வேதிக்கப் பெரும்பாண்டந் தள்ளி லேதான்
பிசகாமல் நிலையாகப் போட்ட முக்கி

நீதிக்கப் பாணிதன்னை நிறைய வூற்றி
நிலையாக அடுப்பேற்றித் தீயைப் போட்டு
வாதிக்க ஒட்டவே யிலையில் தானே
வடிவாகச் சுவரியே நிற்கும் பாரே.

5) பாருநீ யதைஎடுத்துக் கோணிக் குள்ளே
பதிவாகக் கூட்டியே பிழிந்து நல்லாய்
சாருநீ சட்டிதனி லிட்டுக் கொண்டு
சரியாகச் சூதமது களஞ்சு பத்து
வாருநீ யடுப்பேற்றிக் குழம்பு போலாம்
வகையுடனே யதையறிந்து புலத்திய னேகேள்
நாருநீ இறக்கியே கல்வத் திட்டு
நலமாக இருசாமம் அரைத்தி டாயே.

6) அரைத்திட்ட பின்புதா னறையக் கேளு
அடைவாகத் தந்திலிரை சுத்தி பண்ணிக்
கரைத்திட்டுச் சூதமிடை போட்டு நல்லாய்
நலமாக யரைத்துவிடு சாமம் தானும்
அரைத்திட்டு மேல்மருந்து சொல்வே னப்பா
வடிவாகக் காயமிந் துப்புதான்
பரைத்திட்டுப் பொரிகாரஞ் சிலையுந் தானும்
பரிவாக அரிதாரம் ரோகணியும் போடே.

7) போடவே திப்பிலியும் ரசமுங் கேளு
பிசகாமல் கரியசீ ரகமும் போடு
நாடவே கெந்தியுந்தான் கூடப் போடு
நலமாக வகைக்கொரு கழஞ்சு போடு
வாடவே வகைமுறத்தான் சொல்லக் கேளு
வடிவாகத் தாளகத்தைப் பொடியாய்ப் பண்ணிக்
கூடவே கெந்தகத்தை ஒட்டி லிட்டுக்
குணமாக உருக்கியே தாரம் போடே.

8) தாரத்தைப் போட்டுடனே கிண்டி விட்டுத்
தாட்டிகமாய்ச் சரக்கெல்லாம் வறுத்துப் பின்பு
கோரத்வுதச் செப்பாமல் அரைத்தா யானால்
கொடுமையா யிருக்குமடா குழம்பு தானும்

பாரத்தைப் பாராதே மோருஞ் சோறும்
பதிவாக உண்டுநீ அரைத்துத் தீரு
காரத்தைக் கண்டவுடன் ஓட வேண்டாம்
கனிவாக யரைக்கையிலே குழம்ப தாமே.

9) ஆமேதா னிருசாம மரைத்த ரைத்து
அடைவாகக் காயாத குழம்பாய் நிற்கும்
வாமேதான் என்னுடைய குழம்பே யாகும்
வடிவாகக் குழம்பென்றால் பிணியுந் தீரும்
போமேதா னனுபானத் துடனே யுண்ண
பொலிவாக நொடிஎல்லாம் தவிடு பொடியாம்
யாமேதான் புலத்தியனே உனக்குச் சொன்னேன்
யாருலகில் மனிதருக்குச் சொல்வார் பாரே.

10) சொல்லாதே அனுபானச் சூத்தி ரத்தில்
சுருதிபெறச் சொல்லிவிட்டேன் அனுபா னத்தைக்
கல்லாத பேருக்குக் கொடுக்க வேண்டாம்
கனிவாக அனுபானத் துடனே கொள்ளு
மல்லாக வந்ததொரு பிணியுந் தீரும்
மயமான பெருவயிறு மகோத ரங்கள்
நல்லாகப் போகுமடா வாத மெல்லாம்
நலிவாக அண்டத்தின் வாதம் போமே.

11) அண்டத்தின் வாதம்போம் வெட்டை தீரும்,
அடைவாகப் பித்தமென்ற தெல்லாம் தீரும்
கண்டத்தில் பிணிபலவுந் தீர்ந்து போகும்
கனிவாகச் சிலேஷ்மங்கள் காசந் தீரும்
பிண்டத்தில் பிணிதீரும் பவுத்தி ரங்கள்
பொல்லாத சூலைபதி னெட்டும் போகும்
அண்டத்தி லுண்டாகும் பாண்டு போகும்
அதிவாகக் காமாலை எல்லாம் போமே.

12) போகுமே சீதபேதி ரத்த பேதி
பெருமையாய்க் கொடுக்காதே குன்றி தானும்
வாகுபெறக் கொடுத்துவிடு பேதி யாகும்
வளமாக மோருஞ்சோறு முண்ண நிற்கும்

ஆகுமே புளியதனைத் தள்ளிப் போட்டு
அடைவாக ரொம்பவுந்தான் பேதி யானால்
ஆகுமே வகையுடனே குளிக்கச் சொல்லு
அதிவேகம் போய்விடும் பிரமை தானே.

13) தானேதான் பெண்ணினால் ரோக மாச்சு
தாஷ்டிகமாய் மாயாதே பசிய டக்கி
வானந்த புணர்ச்சியால் நின்ற போது
வடிவாக ஒடிவிந்து வலித்துப் போகும்
கோனேதா னரம்புதனி லேறும் போது
குருரமா யரையாப்பு சூலை யாகும்
வானந்த சூலையினால் வந்த ரோகம்
வடிவாக எல்லாமும் கன்னியா லாச்சே.

14) ஆச்சுதே சொன்னதொரு குழம்பு தன்னை
அடைவாக உண்டிடவே பிணிகள் தீரும்
வாச்சுதே சூத்திரத்தில் மறைத்தே னப்பா
வடிவாக இந்நூலில் அதிசயமாய்ச் சொன்னேன்
வாச்சுதே கையகமாச் செய்து கொண்டு
வளமுடனே அனுபான மறிந்து செய்ய
ஏச்சுதே அகத்தியன் சொன்ன மார்க்கம்
இதமாக நியாயவழி அடுத்தி டாயே.

The actual formula according to the above new excavaons among very old cudgen leaves of Agastiar is as follows:

AGASTIAR KUZHAMBU (original formula)

The secret of green herb (hidden or not mentioned in Agastiar Soothiram wherein is mentioned Agastiar Kuzhambu) is nothing but Nimba Pathiram or Vembu leaves Please secure Vembu leaves in plenty, put it in a big mud pot (after cutting the leaves in small bits) and fill the pot with pure water.

Boil it until the water is well dried up (சுண்ட மட்டும்). Then strain the boiled leaves and decoction by means of a sack. (கோணி) Transfer this decoction to mud pot and add to it purified Patharasam or Valirasam about 10 kazhanjus and boil it on gentle fire until the solution Gets to a Kuzhambu consistency; and then place this solution in a kalvam. Keep on rubbing it atleast for two jamams: then add to it purified Nervalam 10 kazhanjus and again rub the kalvam for one more jamam. Then take the following other ingredients to be added to the above and again rub for two more jamams:

| | |
|---|---|
| Perungayam | —fried and powdered |
| Induppu | — powdered |
| Vengaram | — fried and powdered |
| Manosilai | — Purified and powdered |
| Thazhakam | — do |
| Katugu roghani | — fried and powdered |
| Thippilli | — do |
| Rasam | — Purified |
| Karunjeerakam | — fried and powdered |
| Ghendi | — Purified and powdered |

Note: Please melt Ghendi one kazhanju in an agal over charcoal fire and mix with it Rasam and Thazhakam powder. Then rub this mixture well in another Kalvam adding one by one all the other ingredients.

## தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| | | உரு. |
| 1. | மராட்டியர் செப்பேடுகள் - 50 - செ. இராசு | 150—00 |
| 2. | கலித்தொகை - இ. வை. அனந்தராமையர் பதிப்பு | 150—00 |
| 3. | சங்க இலக்கியக் கட்டுரைகள் | 30—00 |
| 4. | ஆராய்ச்சித் தொகுதி - மு. இராகவையங்கார் | 100—00 |
| 5. | தொல்காப்பியம் - சொல் - தெய்வச்சிலையார் உரை | 60—00 |
| 6. | தொல்காப்பியம் - நன்னூல் - சொல்லதிகாரம் - க. வெள்ளைவாரணர் | 75—00 |
| 7. | நன்னூற் காண்டிகையுரை - நாவலர் பதிப்பு | 65—00 |
| 8. | பெரிய திருமொழி - தெ. ஞானசுந்தரம், | 180—00 |
| | பொதுப்பதிப்பு | 130—00 |
| 9. | நீலகேசி - எ. சக்கரவர்த்தி நயினார் | 140—00 |
| 10. | சட்ட இயல் - மா. சண்முகசுப்பிரமணியம் | 92—00 |
| | மாணவர் பதிப்பு | 36—00 |
| 11. | தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் - கே. எம். வேங்கடராமையா | 155—00 |
| 12. | Tamil Literature - Poornalingam Pillai | 85—00 |
| 13. | மொழி நூல் - மாகறல் கார்த்திகேய முதலியார் | 75—00 |
| 14. | Tamil University Machine - Translartion System K. C. Chellamuthu. K. Rangan, K. Murugesan | 75—00 |
| 15. | A Study on The Thanjavur Art Plate - P. Saravanavel | 60—00 |
| 16. | நாமதீப நிகண்டு - வையாபுரிப்பிள்ளை பதிப்பு | 68—00 |
| 17. | Indians in South Africa - K. Nambi Arooran | 60—00 |
| 18. | மொழிநூற் கொள்கையும் - தமிழ்மொழி அமைப்பும் கா. சுப்பிரமணியப் பிள்ளை | 45—00 |
| 19. | பத்துப்பாட்டு - ஜே. வி. செல்லையா | 85—00 |
| 20. | மருந்தியல் - டாக்டர் மு. துளசிமணி டாக்டர் சா. ஆதித்தன் | 160—00 |
| 21. | தமிழ் அபைப்புற்ற வரலாறு யாழ்ப்பபணத்து நல்லூர் ஞானப்பிரகாசர் | 45—00 |
| 22. | திருக்குறள் - பையடக்க - கையெழுத்துப் பதிப்பு | 5—00 |

105

23. கைவல்லிய நவநீதம்
- கோ. வடிவேலுச் செட்டியார் தெளிவுரை 75—00
24. நமது அரசியல் அமைப்புச் சட்டமும் மொழிகளும்
- எல். கிருட்டிணசாமி பாரதியார் 5—00
25. Shakespeare & Ilango as Tragedians
- K. Chellappan 65—00
26. கணிப்பொறி ஒருங்கும் பேசிக் மொழியும்
- கா. செ. செல்லமுத்து நூலகப் பதிப்பு 65—00
மாணவர் பதிப்பு 35—00
27. தமிழில் காப்பியக் கொள்கை - து. ஆ. சீனிச்சாமி 79—00
28. சிலப்பதிகாரம் - உ. வே. சா. பதிப்பின் மறுபதிப்பு 125—00
29. புதிய இராகங்கள் - து. ஆ. தனபாண்டியன் 150—00
30. குறுந்தொகை - மு. சண்முகம் பிள்ளை 140—00
31. The Catalogue of Palm Leaf
Manuscripts in the Tamil University
K. C. Chellamurhu, T. Padmanaban,
P. V. Nagarajan 55—00
32. நாடகக் கலை - பெர்டோல்ட் பிரெக்ட்,
தமிழில் இ. இராமசாமி 65—00
33. போகர் வைத்தியம் 700
- செ. பிரேமா, பா. வெ. நாகராசன் 112—00
34. பொறுப்பு - கார்டன் பி. ராபி,
தமிழில் இரா. சுப்பராயலு 25—00
35. தொடரியல் மாற்றிலக்கண அணுகுமுறை
- கி. அரங்கன் 30—00
36. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல் :
இளம்பூரணர் உரை - அடிகளாசிரியர் 145—00
37. புறநானூறு - உ. வே. சா. பதிப்பின் மறுபதிப்பு 126—00
38. Computer Analysis of Tirukkural
- K. C. Chellamuthu, S. Baskaran 166—00
39. ஆத்திசூடியுரை - ரா. ராகவையங்கார் 40—00
40. மர இனப்பெயர்த் தொகுதி
- பெ. மாதையன், எச். சித்திரபுத்திரன் 200—00
41. சீவேந்திர சரிதம் 70—00
42. உடல், குரல் ஒருங்கிணைப்பு
- சே. இராமானுஜம், கு. முருகேசன் 20—00

9

43. காச நோய் - அ. கதிரேசன் 115—00

44. தஞ்சாவூர் மாவட்டத்தில்
பயன்படுத்தப்படும் மூலிகைகள் - ஓர் ஆய்வு
ஜ. சாதிக், பொ. சுரேந்திரகுமார் 22—00

45. ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் சரித்திரம்
- உ. வே. சா. பதிப்பின் மறுபதிப்பு 120—00

46. மனிதனும் மரபியலும் - ஞா. இராசராசேசுவரி 7—50

47. செழியதரையன் பிரபந்தங்கள்
- பொறுப்பாசிரியர்: மு. சண்முகம் பிள்ளை
- குறிப்புரை: ப. வெ. நாகராசன் 107—00

48. குடற்புண்ணைக் குணப்படுத்தலாம்-சு. நரேந்திரன் 5—00

49. மேலாளர் - ஆங்கில மூலம் கார்டன் பி. ராபி;
- தமிழாக்கம் இரா. சுப்பராயலு 30—00

50. தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன்
- வெ. வரதராசன் 55—00

51. Dravidian Influence in Thai Culture
- M. E. Manickavasagom 70—00

52. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்
- தொகுதி 1 அ - ஔ 250—00

53. வாழ்வியற் களஞ்சியம்
- தொகுதி 1 அ - அளபெடை 300—00

54. அறுவைச் சிகிச்சை நோய் நாடல்
- லெ. சிவராமன் 120—00

55. English - Tamil Pedagogical Dictionary
- S. Rajaram 80—90

56. பத்துப்பாட்டு - மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்
- உ. வே. சா. பதிப்பின் மறுபதிப்பு 140—00

57. தமிழர் வாழும் அண்டை நாடுகளில் தமிழ்க்கல்வி
- தி. முருகரத்தனம் 57—00

58. சீவக சிந்தாமணி
- உ. வே. சா. பதிப்பின் மறுபதிப்பு 265—00

59. The Process and the Effects of
Modernization in Indian Rural Communitiss
- S. S. Thekkamalai 72—00

60. அகத்தியர் குழம்பு
- செ. பிரேமா, ப. வெ. நாகராசன் 40—00